

வாசகமாம் வாச்சியமாம் நடுவாய் அந்த
வாசக வாச்சியம் கடந்த மௌனமாகித்
தேசகமாய் இருளகமாய் இரண்டும் காட்டச்
சித்தகமாய் வித்தகமாய் சிறிதும் பந்த
பாசமுறுப் பதியாகிப் பசுவுமாகிப்
பாச நிலையாகி ஒன்றும் பகராதாகி
நாசமிலா வெளியாகி ஒளிதானாகி
நாதாந்த முடிவிற் நடம் நவிற்றுந்தேவே.

— திரு அருட்பா.

பிப்ரவரி, 1987

# ஸப்தகிரி

இதழ் 9 மலர் 17

தனிப்பிரதி ரூ. 1 வருடச் சந்தா ரூ. 12

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டையில் : ஸ்ரீ மத்வாச்சாரியார்—சித்திரம்: ஜகதீஷ்.

2-வது வைகுண்ட ஏகாதசியை முன்னிட்டு சிறப்பு அலங்காரத்தில் உபயநாச்சிமார் களுடன் ஸ்ரீ வேங்கடேஸ்வரர் — திருமலை.

3-வது : திருமலையில் பாரி வேட்டையின்போது உற்சவரின் திருவீதி உலா. (48-ம் பக்கம் பார்க்க)

பின்னட்டையில் : சமயக்குரவர் நால்வர்-சித்திரம்-ஜெகதீஷ்.

சிறப்பாசிரியர் :
திரு. எஸ். லக்ஷ்மிநாராயண I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர் :
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு :
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . .

" பாரதம் பானுமானிந்துர்யதினஸ்யுரமீத்ரய:
ததோSஜ்ஞானதமோந்தஸ்ய காவஸ்தா ஜகதோ பவேத் "

பாரதமும், சூரியனும், சந்திரனும் ஆகிய இம்மூன்றும் இல்லாதிருந்தால் இந்த உலகம் அறியாமை என்ற இருளில் அமிழ்ந்து விட்டிருக்கும் என்ற மேற்படி மனுஸ்மிருதியின் கருத்து பாரத மண்ணின் மகிமையை விளக்குகிறது. உலகத்தில் உள்ள மற்றைய நாடுகளுக்கு அவைகளுக்கென்று ஒரு சமயம் என்றும், ஒரு நூல் என்றும், ஒரு ஸ்தாபகர் என்றும் இருந்திட, பாரதத்தில் பல சமயங்களும், பல சமய நூல்களும், பல சமயத் தலைவர்களும் இருக்கும் நிலை இம் மண்ணிற்கு பெருமை சேர்க்குமா, இது குழப்பத்தையல்லவா ஏற்படுத்தும் என்ற ஐய கேள்வி இன்றைய இளைஞர்களி டையே ஏற்பட வாய்ப்புண்டு. மொழி என்ற ஒரு அடிப்படை பாகுபாட்டின்மீதுதான் இன்று இந்தியர்கள் தங்களுக்குள் ளேயே பிரிக்கப்பட்டுள்ளார்கள். இனமும், இடமும், சமயமும் அதற்கு துணை போகின்றன. இத்தனை வேறுபாடுகள் இருந்தும் ஏன் இன்னும் பாரதம் கூறுபடவில்லை! நாட்டின் எல்லையோரப் பகுதியில் அந்நியன் படை திரட்டும் போதும், நாட்டின் ஒரு பகுதியில் அழிவோ, வன்முறையோ ஏற்படும்போதும் இங்கு இவன் ஏன் துக்கப்படுகின்றான். இதற்குக் காரணம் அச்சமா, அனுதாபமா? இல்லை. ஏதோ ஓர் உணர்வு இமயத்தையும், குமரியையும் இணைத்துள்ளது. இதற்குக் காரணம், எந்த சமயத்தை நம்மைப் பிரிக்கும் ஒரு சாதனமாக நினைக்கின்றோமோ, அதே சமயம்தான் நம்மை இற்றை வரை பிணைத்துள்ளது, பிணைத்தும் வருகின்றது. இந்த உண்மையைத்தான் இன்றைய இளந்தலைமுறையினர் அறிந்து தெளிதல் வேண்டும்.

ஒரு சமயத்தின் ஆதிக்கம் அதன் சடங்கு முறைகள் அல்லது வழிபாட்டு முறைகளின்மீதோ ஆதாரப்படவில்லை. அவ்வெளிப்பாடுகள் ஒருவனது உலகியல் பசி தீர்த்துக் கொள்ளவே கடைப்பிடிக்கப்படுகின்றன. ஆனால் சமயங்களின் அடிப்படை நோக்கம் மனிதன் மனிதனை புரிந்து கொள்ள வேண்டும் என்பதும், அந்த மனிதத் தன்மையுடன்தான் இறைத் தன்மையை—இறை உண்மையை அறிந்து கொள்ள வேண்டும், அறிந்து கொள்ள முடியும் என்பதுதான். இதனைத்தான் இறையவதாரங்களும், மெய்யடியார்களும், குறிப்பாக ஆசார்ய பெருமக்களும் நமது சமயத்தின் உண்மை யான ஆன்மீக உண்மைப் பொருளாக ஒரே குரலில் முழக்கமிட்டனர். சத்ய தர்மம், வைதிக தர்மம், ஆர்ஷ தர்மம், வேதாந்த தர்மம், மானவ தர்மம் என்று பல பெயர்களில் வழங்கப்பட்ட நமது இந்து சமயம் சனாதன தர்மம் என்றே பன்னெடுங்காலமாக அழைக்கப்பட்டு வந்தது. சமயம் என்று கூறிடும்போது அவ்இயக்கம் ஒருவரால், ஒரு பகுதியினர்க் காக, ஒரு காலத்தில் தோன்றிய ஒன்றாகக் கருதப்படும்: ஆனால் சமயம் என்று அழையாது தர்மம் என்ற பெயரில் அமைந்தது ஏனெனின் ஆறறிவு பிறப்பாளனான மனிதன் முதலில் தன்னை ஆள்வது எப்படி —தன் பிறப்பின் பெரு மையை விளக்குவது எவ்வாறு—தன்னைப்படைத்த அப்பரம்பொருளின் மாட்சிமையினைத் தெரிவிப்பது எங்ஙனம் என்ற கேள்விகளுக்கு விடை தரும் வகையில் மானிட வாழ்க்கை நெறிமுறைகளை தன்னிடத்தே கொண்டதனால்தான். இத்தகு பெருமைமிகு இந்து 'தர்மம்' இந்து 'சமயமாக' மாறினாலும், பின்னர் அது பல கிளைகளாக விரிந்தாலும், வேற்றுமையில் ஒற்றுமை கொள்ளும் வகையில் அது தன்னுடைய அடிப்படை (தர்ம) உண்மைகளிலிருந்து சிறிதும் விலகவில்லை.

உபநிஷத்துக்களையும், கீதையையும், பிரம்ம சூத்திரத்தையும் தங்கள் வழிகாட்டி நூல்களாகவும், பல உருவங் கள், பல பெயர்கள் வழங்கப்பட்டாலும் இறைவன் ஒருவனே என்ற பேருண்மையினையும், கர்ம வினைப்பயனில் நம்பிக்கை யினையும், கர்ம, பக்தி, ஞான மார்க்கங்களே நமக்கு இறைவனை அறிவிக்கும் என்பதனையும், மனித வாழ்க்கையில் புனிதம், தன்னடக்கம், பற்றின்மை, உண்மை, அஹிம்ஸை ஆகியன பெரும் பங்கு வகிக்கின்றன என்பதையும், இஷ்ட தேவதை வழிபாட்டின் பெருமையினையும், மோக்ஷம் என்பது நம்மை இகபர சுக துக்கங்களிலிருந்து விடுவித்து நம்மை ஆன்மீக உலகிற்கு அழைத்துச் செல்லும் சாதனம் என்பதனையும் நமது இந்து சமயம் அன்று தொட்டு இன்று வரை அறிவுறுத்தும் உண்மைப் பொருள்களாம். இந்த உண்மையைத்தான் உறுதிப்படுத்தினர் நமது இந்து சமய தத்துவ மும்மூர்த்திகளாம் ஸ்ரீ சங்கரரும், ஸ்ரீராமானுஜரும், ஸ்ரீமத்வரும். மண்ணில் சமய, சமூக கொந்தளிப்பு தோன்றிய போது, இம்மூவரும் இப்புண்ணிய பூமியில் பேரொளிகளாக வந்துதித்தனர்.

ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றே, இருவருக்கும் இடையே காணப்படுவது மாயையே. நமக்குள்ளேயே நாம் பரமனைக் கண்டிடலாம் என்ற ஞான மார்க்கத்தை சங்கரர் கூறியதும், இறைவனும் பக்தனும் வேறு, ஆனால் இரு வரும் பிணைக்கப்பட்டவர்களே. நம்மை முழுமையாக அவனிடம் ஒப்படைத்து சரணாகதி அடைந்தால் அவனடி புகலாம் என்ற பக்தி மார்க்கத்தை ஸ்ரீராமானுஜர் தெளிவித்ததும், ஜீவன் வேறு பிரம்மம் வேறு. இடையில் இருக்கும் மாயை உண்மைதான், ஜீவர்களில் பேதம் உண்டு, ஆத்ம ஸ்வரூபமான சுகத்தை அடைவதே முக்தி, இறைவனை வேதங்களால் மட்டுமே அடைய முடியும் என்ற கர்ம மார்க்கத்தை மத்வர் அறிவுறுத்தியதும் ஓர் ஊருக்கு இட்டுச் செல்லும் மூன்று பாதைகளாகும். இதில் எதிலும் நாம் பயணம் மேற்கொள்ளலாம். ஏனெனின் இம்மூன்று மார்க்கங்களுக்கு அடிப் படை பக்தி என்பதேயாம். இதில் மத்வர் கூறியிருப்பது உயிர்கள் தங்களுக்கு இடப்பட்ட கர்மத்தை சரிவர செய்தாலேயே போதும் என்பதில் மனிதன் மனிதனாக வாழ்ந்தாலே அது அவனை தெய்வ நிலைக்கு உயர்த்திவிடும் என்பதைக்கூறி உலகியல் வாழ்க்கை பயணத்திலேயே ஆன்மீக இலக்கினை கண்டிடலாம் என்பதைத் தெரிவிக்கின்றார்.

இன்றைக்கு சுமார் 700 ஆண்டுகளுக்கு முன் தோன்றி மறைந்து, வாயுதேவ அம்சமாகக் கொள்ளப்பட்டு, கலியில் ஸ்ரீமத்வராக தோன்றி இந்து சமயத்திற்கு ஒரு புதிய தத்துவத்தையும், சமய இலக்கியத்தையும் ஈந்து தன் ஞானப் பெரு்மையினை ஒளிரச் செய்த அவ் ஆசார்ய பெருமானை எதிர்வரும் மத்வநவமி அன்றும், சைவ சமயப் பெருமை யினை விளங்கிடச் செய்த அச்சமயம் தந்த சமயக் குரவர்கள் உள்ளிட்ட பல்வேறு மெய்யடியார்களை எதிர்வரும் சிவராத்திரி திருநாளன்றும் நினைவு கூர்ந்து இந்து தர்மம் மேலும் தழைத்தோங்கிட அவர்கள் தாள் பணிந்து சரணடைவோமாக!

# செய்திச் சுருக்கம்

வெளியீடும் பாராட்டும் :

திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் 7-1-87 அன்று மாலை தி. தி. தே. இந்து தர்ம ரக்ஷண சமஸ்தாவின் ஆதரவில் ஏற்பாடு செய்யப்பட்ட விழாவின் போது, 'ஸப்தகிரி' பத்திரிகை அலுவலகத்தில் நூல் வெளியீட்டுப் பிரிவில் பணி புரியும் திரு. எம். கொண்டமாச்சார்யலு அவர்கள், ஸ்ரீ அன்னமாச்சார்யா பாடல்கள் பற்றி எழுதிய "அம்ருத ஸாரம்" எனும் தெலுங்கு நூலினை, தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. டி. சீதாராமய்யா அவர்கள் வெளியிட்டார். இவ்விழாவில் தி. தி. தே. 'ஸ்ரீ நிவாச பால பாரதி' திட்டத்தின் ஒத்திசைவாளர் டாக்டர். எஸ். பி. ரகுநாதாச்சார்யா அவர்களும் பங்கேற்று உரையாற்றினர். இவ்வெளியீட்டு விழாவைத் தொடர்ந்து, திருப்பதி நகர 'ஃபைன் ஆர்ட்ஸ் அகாடமி' சார்பில் நடைபெற்ற விழாவில் தி.தி.தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ அன்னமாச்சார்யா திட்டத்தின் ஒத்திசைவாளரான திரு. மேடசானி மோகன் அவர்களின் 100வது 'அஷ்டாவதான' நிகழ்ச்சி வெகுச் சிறப்பாக நடைபெற்றது. விழா இறுதியில் திரு. மோகன் அவர்களுக்கு திரு. டி. சீதாராமய்யா அவர்கள் புஷ்பாபிஷேகம் செய்து, பொன்னாடைப் போர்த்திக் கௌரவித்தார்.

**தரிசனம் :**

'வைகுண்ட ஏகாதசி' திருநாளன்று திருமலைக்கு லட்சத்திற்கும் மேற்பட்ட யாத்திரிகர்கள் வருகை புரிந்து ஏழுமலையானைத் தரிசித்தனர். அன்று காலை 3 மணிக்கே வருடத்திற்கு ஒரு முறை திறக்கப்படும் "வைகுண்ட வாசல்" திறக்கப்பட்டது.

பதவி நியமனம் :

திரு. எஸ். கே. ஜெயசந்திரா அவர்கள் தி. தி. தேவஸ்தானத்தின் புதிய பாதுகாப்பு மற்றும் கண்காணிப்பு அலுவலராக நியமிக்கப்பட்டுள்ளார்.

வெளியீட்டு விழா :

16-1-87 அன்று திருமலையில் தி. தி. தேவஸ்தானத்தாரால் பதிவு செய்யப்பட்ட கன்னட தாஸர்களால் இயற்றப்பட்ட கீர்த்தனைகள் அடங்கிய 6 பதிவு நாடாக்களையும், ஸ்ரீ அன்னமாச்சார்யா தெலுங்கு கீர்த்தனைகள் அடங்கிய 2 பதிவு நாடாக்களையும் தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு.டி.சீதாராமய்யா அவர்கள் வெளியிட்டார். இவ்விழாவில் பங்கேற்று உரையாற்றிய தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. எஸ். லக்ஷ்மி நாராயணா அவர்கள் இப்பதிவு நாடாக்கள் சிறப்புடன் வெளிவர பெரிதும் துணைபுரிந்த முன்னாள் தி. தி. தே. பாதுகாப்பு அலுவலர் திரு. கே. கிருஷ்ணமூர்த்தி அவர்களைப் பாராட்டினர். தொடர்ந்து பேசுகையில் இது போன்ற பக்திப் பாடல்கள் அடங்கிய பதிவு நாடாக்களை வெளியிடும் முயற்சி எதிர்காலத்தில் பெருமளவில் மேற்கொள்ளப்படும் என்றும் கூறினர்.

பாரி வேட்டை :

திருமலையில் மிகப் பழங்காலத்திலிருந்து நடத்தப் பெற்று வரும் ஒரு 'விசேஷ நாள்' திருநாள் இது. கி.பி. 1339ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்றில் ஸ்ரீரங்கநாத யாதவராய அரசனின் ஆட்சியின் மூன்றும் ஆண்டில் உற்சவமூர்த்திக்கு "திருவேட்டைத் திருநாள் வண் சடகோபன் நந்தவனம் அமுதுபடி" என்றவாறு காணப்படுகின்றது.

புரட்டாசி பிரம்மோற்சவத் தீர்த்தவாரி தினத்திற்கு மறுநாள் வரும் 'பாடிய வேட்டைத் திருநாள்' பற்றி கி. பி. 1537ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று "புரட்டாசி மாதத்தில் விஜய தசமிப் படியாய் பாட்டிமை நாள் மலைகுனிய நின்ற பெருமாளும் ஞச்சிமாரும் சேனை முதலியாரும் தாம் திருத்துவித்த பாடிய வெளியில் ஏறியில் ஏறி அருளி அமுது செய்தருளி வன்னி மரம் குத்த..." எனக் கூறுகின்றது. திருப்பதியில் கி. பி. 1456 ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்றில் "தை மாதம் இரண்டாம் தேதி பாடிய வேட்டை" என்று ஒரு குறிப்பு உள்ளது.

இத்திருநாளுக்கு பல நிவந்தங்கள் இருந்து வந்திருப்பதும் தெரிய வந்துள்ளது.

திருமலையிலும் மகர சங்கராந்திக்கு மறுநாள் தற்போது பாடிவேட்டைத் திருவிழா நடைபெறுகிறது.

உற்சவ தினத்தன்று ஸ்ரீஸ்வாமிக்கு விடியற்கால, நண்பகல் ஆராதனைகள் முடிந்த பிறகு, ஸ்ரீ மலையப்ப ஸ்வாமி வெள்ளித் திருச்சியிலும் ஸ்ரீ கிருஷ்ண ஸ்வாமி மற்றொரு திருச்சியிலும் வீற்றிருந்து, கோயில் திருவலம் வராமலேயே, நேராகப் பாடி வேட்டை மண்டபத்திற்கு எழுந்தருளுவர். அங்கு ஸ்ரீ ஸ்வாமிக்கு ஆராதனை, நிவேதனம், ஆரத்தி ஆன பிறகு உபயதாரர்களுக்கும் தாள்ளப்பாக்கத்தினருக்கும் மரியாதைகள் செய்யப்பெற்று பிரசாதங்கள் வினியோகிக்கப்படும். பின்னர், ஸ்ரீ மலையப்ப ஸ்வாமியும் ஸ்ரீ கிருஷ்ண ஸ்வாமியும் மண்டபத்திலிருந்து புறப்பட்டு, அதன் முன் எழுந்தருளுவர். ஸ்ரீ கிருஷ்ண ஸ்வாமியை மட்டும் ஸ்ரீ ஸந்நிதி ஆயன் பூஜை செய்த இடத்திற்கு எழுந்தருளப்பண்ணி, பால், வெண்ணை நிவேதனம் செய்தபின், ஸ்ரீ மலையப்ப ஸ்வாமியின் சந்நிதிக்குக் கொண்டு வருவர். அதன் பின்னர், அந்த ஆயன் அளிக்கும் பால், வெண்ணை ஸ்ரீ மலையப்ப ஸ்வாமிக்கு நிவேதனம் செய்யப்பெற்று, ஆயனுக்கு மரியாதைகள் வழங்கப்பெறும்.

பிறகு, ஸ்ரீ மலையப்ப ஸ்வாமி சற்று தூரம் விரைவாகச் சென்று, அவர் சார்பில் அர்ச்சகர் அம்பு போட்ட பின் திரும்பி வருவார். இங்ஙனம், மூன்று முறை நடைபெறும். பிறகு ஸ்ரீ மலையப்ப ஸ்வாமியும் ஸ்ரீகிருஷ்ண ஸ்வாமியும் 'படிக்காவல்' (பிரதான) கோபுரத்தின் முன்பு எழுந்தருளுவர். ஸ்ரீ மலையப்ப ஸ்வாமி மட்டும், கோயில் நிர்வாகத்தினருக்கு மரியாதை நடத்த, பின்னர் திருவீதி உலாவிற்கு எழுந்தருளுவர். இதற்கிடையில், ஸ்ரீ கிருஷ்ண ஸ்வாமி நேராகக் கோயிலுள் எழுந்தருளி ஸந்நிதி சேருவார். திருவீதி உலா முடிந்த பின், ஸ்ரீ மலையப்ப ஸ்வாமி கோயிலுள் சென்று ஸந்நிதி அடைவார்.

**தகவல் : அ. நடராஜன்-திருப்பதி.**

படிம இயல் (Imagery) தமிழ்த் திறனாய்வுத் துறைக்குப் புதியது; ஆய்வாளர் சிலர் தமிழில் படிமவியல் தொடர்பாக அண்மைக் காலத்தில் எழுதி வருகின்றனர். எனினும், படிமவியல் இன்னும் புதிய துறையாகவே—போதுமான அளவு அறிமுகமாகாத துறையாகவே இருந்து வருகிறது.

மேலைநாட்டுத் திறனாய்வரங்கிலும் படிமவியல் 1908க்கு மேல்தான் தனித்துறையாக அறிமுகமாகி வளரத் தொடங்கியது. எல்லா மொழிகளிலும் தொன்மை இலக்கியங்கள் தொடங்கி இன்றைய இலக்கியம் வரையிலும் படிமவியலின் கூறு

# திருவாசகத்தில் படிமம்

பாடுகள் காணப்படுகின்றன; எனினும் படிமவியல் பற்றிய ஆராய்ச்சியைத் தனிப்பிரிவாகக் கொண்ட முயற்சி 1908ல் தான் முதன்முதலில் தொடங்கியது.

மேலைநாட்டுத் திறனாய்வு வளர்ந்துள்ள நிலையினையும் தமிழ் முதலான இந்திய மொழிகளில் திறனாய்வு அமைந்துள்ள நிலையினையும் ஒப்பிட்டு நோக்கும்போது, படிமவியல் பற்றிய ஆராய்ச்சி நம் மொழியில் முதிர்ச்சியோ வளர்ச்சியோ பெறாமல் இருப்பது குறித்துப் பெருவியப்போ வேதனையோ கொள்ள வேண்டியதில்லை. தமிழ்த் திறனாய்வில் வளர வேண்டிய வளமான துறைகளில் படிமவியலும் ஒன்று.

சென்னைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ள ஆங்கில-தமிழ் அகராதி:

Imagery: உருவங்களின் தொகுதி, உருவங்கள்; உவம உருவக அணி வகை; இலக்கிய அணி; நினைவுக் காட்சி, மனத்தகத் தோற்றம்; புனைவாற்றல், கற்பனை.

Image: உருவம், படிவம்; உருவச் சிலை, படிமம்...... எனப் பொருள் விளக்கம் தந்துள்ளது. (English-Tamil Dictionary: Ed. Dr. A. C. Chettiar - University of Madras p. 515). இந்த விளக்கம் முற்றிலுமான தெளிவினைத் தருவதாகக் கொள்ள முடியாது; அதே சமயம் படிமவியல் பற்றிய தெளிவுக் குறிப்பு இந்த விளக்கத்தில் இல்லையென்றும் சொல்லமுடியாது.

படிமம் பற்றிய விளக்கத்தைச் சில சொற்களிலோ, வாக்கியங்களிலோ அமைக்க முடியாது.

ஓர் அடைமொழியாகப் படிமக் காட்சியை உருவாக்கலாம்; உருவக



மாகவோ உவமையாகவோ படிமக் காட்சியை உருவாக்கலாம்; வருணனையாக—முற்றிலும் வருணனையாக அமையும் சில வாக்கியங்களாகப் படிமக் காட்சியைப் படைக்கலாம். ஆனால், வருணனைக் கூறாக வருகின்ற அடைமொழி, உருவகம், உவமை, சொற்றொடர் அல்லது வாக்கியங்களாக வருவனவெல்லாம் படிமக்

திரு. டி. ஏ. சொக்கலிங்கம்,
மதுரை.

காட்சி ஆகிவிடுவதில்லை. துல்லியமான வருணனை விளக்கமாக—புறத்தே காணப்படுகின்ற காட்சியின் அப்பட்டமான விவரணமாக—உள்ளது உள்ளபடியே அமைந்துவிடுகின்ற புறத்தோற்ற விளக்கமாக இருப்பதற்கு மேலும் ஒரு திறம் உடையதாகப் படிமக் காட்சி அமையவேண்டும்; நம் அகக் காட்சியைத் தூண்டிவிடுகின்ற, பயில்வோனின் உணர்வைக் கிளர்ந்தெழத் தூண்டிப் படைப்போனின் இதயக் காட்சியில் உருவாக வேண்டும். (C. Day Lewis: The Poetic Image p. 18)

வேறு வகையில் சொன்னால், படிமம் என்பது துல்லியமான காட்சி விளக்கம் மட்டுமே படிமக் காட்சி ஆகிவிடாது. படிமக் காட்சி அடைமொழியாகவோ உருவகமாகவோ வந்து வருணனைக் கோலம் கொள்ளலாம்; ஆனால், வருணனையாய்—விளக்கம் தருவதாய் மட்டும் அமைவது படிமக் காட்சி ஆகிவிடாது. அதனைப் பயில்கின்றவன் உள்ளத்தின் கற்பனையிலே மேலே சொன்ன விளக்கக் கூறுகளுக்கும் மேலான—ஆழமான—செறிவார்ந்து முறுக்கேறிய—முருகியல் உணர்வு எழுப்புவதாகப் படிமக் காட்சி அமைய வேண்டும். அதாவது, வருணனை விவரணத் திறத்துக்கும் மேலாக உணர்ச்சியின் கிளர்ச்சிக்கு உதவுகின்ற கலைத்திறத்தைக் கொண்ட சொல்லோவியமாகப் படிமக் காட்சி அமையும் எனலாம்.

திறமை சான்ற படைப்பாளியால் உருவாக்கப்படுகின்ற புதுமையும் தெளிவும் கொண்ட படிமக் காட்சியானது, படைப்பாளியால் உருவாக்கப்படுகின்ற சூழல் அல்லது

பொருளினைப் பற்றி அவன் கொண்ட அதே உணர்வினையும் கருத்தையும் நாமும் அடையச் செய்யவல்லது. தெளிவுபடுத்தவும் வளம் ஊட்டவும் வல்ல ஆற்றல் கொண்டது நல்ல படிமக் காட்சி; படைப்பாளியின் உணர்வையும் கருத்தையும் நாமும் துல்லியமாகவும் தெளிவாகவும் தீவிரமாகவும், சொற்செட்டோடும் அடையச் செய்வது படிமக் காட்சியாகும். படைப்பாளிக்கு ஏற்பட்ட அதே தாக்கம் நம் மீதும் உண்டாக வேண்டும். இவ்வாறு படைப்பாளியின் இதய உணர்விலே நாம் கலப்பதற்குப் படிமக் காட்சி உதவ வேண்டும் என்பதால், படிமக் காட்சி என்பது மிகவும் அசாதாரணமான— எல்லை கடந்த அனுபவங்களையோ கூறுகளையோ கொண்டு அமைய வேண்டுமென்பதில்லை. நம் வாழ்வின் ஊடும் பாவுமாக உள்ள கூறுகளைக் கொண்டே படிமக் காட்சி அமைய வேண்டும்; அப்போதுதான் படிக்கின்றபோதே உடனுக்குடன் படைப்பாளியின் உணர்வு நிலையனுபவத்தோடு நாமும் ஒன்றிக் கலக்க முடியும். (H. Coombes: Literature and Criticism p. 50).

கண்ணாலும், கருத்தாலும் உணரப்படுகின்ற உலகின் காட்சியை இலட்சிய ஓவியமாகத் தீட்டிக் காட்டுகின்ற படைப்புக் கலைஞனின் உணர்வு நிலையினைப் படிப்பவன் அல்லது காண்பவனும் கண்டுணருமாறு செய்வது படிமக் காட்சியின் இயல்பு என ஆவ்னர் ஜிஸ் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறார். (Avner Zis: Foundations of Marscist Aesthetics p. 76).

ஒரு கவிதையில் வரும் படிமங்கள் அடுக்கடுக்காகவுள்ள கண்ணாடிகள் போன்றன; பல்வேறு கோணங்களில் அமைக்கப்படும் அக்கண்ணாடிகள், கவிதைக் காட்சியின் இயக்கங்களுக்கு ஏற்றவாறு பல்வேறு கருத்துக்கூறுகளை எதிரொலி செய்து கோலம் செய்யும். அவை மந்திரக் கண்ணாடிகள். வருணிக்கப்படும் காட்சிக்கு உரிய அடிப்படைக் கோட்பாடுகளுக்கு எதிரொளி பாய்ச்சுவதோடு அவை அமைவதில்லை; கவிதைக் காட்சியில் அமைக்கப்படுகின்ற கோட்பாடுகளுக்கு உயிரும் உருவும் ஊட்டவல்லன அந்த மந்திரக் கண்ணாடிகள்; கட்புலனாகாத ஆவிக்கும் கட்புலனும் உருவம் தரவல்லவை படிமக் காட்சிகளாகிய மந்திரக் கண்ணாடிகள். இவ்வாறு சி. டே. லூயி படிமங்களை விளக்கியுள்ளார். (C. Day Lewis: The Poetic Image p. 80).

உலக அரசியல் அரங்கில் கருத்துமுதல் வாதத்தைக் கொண்ட அணியினரும், பொருள்முதல் வாதத்தைக் கொண்ட அணியினருமாக இருவேறு வகையினர் பிரிந்திருப்பது போலவே படிமக் கோட்பாட்டிலும் இரண்டு அணிகள் உண்டு. அமெரிக்க, பிரெஞ்சு, ஆங்கில இலக்கிய வாதிகள் கருத்துமுதல் வாத நோக்கிலும், ரஷ்ய இலக்கிய வாதிகள் பொருள் முதல்வாத நோக்கிலும் படிமவியற் கோட்பாடுகளை அணுகுவர். இந்த நுட்ப வேறுபாட்டிலே இக்கட்டுரை கருத்துச் செலுத்தப் போவதில்லை.

படிமவியல் பற்றிய பொதுக்கருத்துக்கள் இதுகாறும் தெளிவுறுத்தப் பட்டன.

இனி, படிமவியல் நோக்கில் திருவாசகப்பாக்களை அணுகிச் சிற்சில எடுத்துக்காட்டுகளை விளக்கப் புகுவோம்.

சொல்லோவியமாக அமைவது கவிதைப் படிமத்தின் இயல்பு என்றும், அப்படிமம் அடைமொழி, உருவகம், உவமை, வருணனை ஆகியவற்றால் உருவாகும் என்றும் மேலே கண்டோம். இவ்வகைப் படிமங்களுக்கு ஏற்ற எடுத்துக்காட்டுகள் சிலவற்றைத் திருவாசகத்திலிருந்து காண்போம்.

முன்னை வினையிரண்டும்
வேரறுத்து முன்னின்றான்
பின்னைப் பிறப்பறுக்கும்
பேராளன்-தென்னன்
பெருந்துறையில் மேய
பெருங்கருணை யாளன்
வருந்துயரம் தீர்க்கும்
மருந்து.

(திருவாசகம்: திருவெண்பா 4)

சிவபிரானை மருந்து என உருவகம் செய்தது பொதுநெறி; வந்த பிணி தீர்க்கும் மருந்து என்றால் இயல்பான கூற்று; ஆயின், இங்கு எடுத்துரைக்கப்படும் மருந்து தனிச்சிறப்புடையது. இறந்த காலத்தே நம்மை நோக்கிப் புறப்பட்டு வந்தடைந்த பிணி நீக்குவதோடு சிவமருந்து நிற்பதில்லை; இற்றைப்பிறவிக் கோளாறு காரணமாக இனி எதிர்காலத்தில் வரவிருக்கும் பிணியினையும் தீர்த்தொழிக்கும் அருமை உடையது இந்த வைத்தியநாத மருந்து. இவ்வுணர்வினை நம் மனத்தே எழுப்புவது வரும் துயரம் என்னும் அடைமொழித் தொடராகும். மருந்து என்ற உருவகம் வருந்துயரம் என்ற அடைமொழியால் படிமச் சீர்மை அடைகின்றது.

'கருணையாளன்' எனச் சிவபெருமானை அடியவர் காண்டல் இயல்பு, ஆயின் முன்னை வினை இரண்டும் வேரறுத்து, பின்னைப் பிறப்பையும் அறுக்கும் அருள் திறத்தினை 'பெரும்' என்ற அடைமொழி உணர்த்துகின்றது.

திருவாசகத்தின் சொற்பொருட் பயன் கருதி அக்கோதில் திருநூலைத் தேன் என உருவகம் செய்துரைத்த பாடல் யாவரும் அறிந்த ஒன்று:

தொல்லை இரும்பிறவி
சூழும் தளைநீக்கி
அல்லல்அறுத்து ஆனந்தம்
ஆக்கியதே - எல்லை
மருவா நெறியளிக்கும்
வாதவூர் எங்கோன்
திருவா சகமென்னும்
தேன்.

(திருவாசகம்: நூற்சிறப்பு)

பிறவி என்னும் பெருந்தளை—நீக்க முயன்றாலும் நீக்கொணா வகையில் சூழும் தளை—இந்தளை வயப்படும் ஆன்மா எடுக்கும் பிறவிகள் எத்துணை எனக் கணக்கிடல் இயலாது—பிறவி தோறும் அனுபவிக்கும் தொல்லைக்கும் ஒரு கணக்கில்லை. தொல்லைக்

களஞ்சியமாய் வரும் பெரும் பிறவித் தளையாகிய அல்லலை அறுப்பது ஒரு தேன்; அல்லல் அறுப்பதோடு ஆனந்தத்தையும் அருளவல்லது அந்தத் தேன். அத்தேன் பெற்றுரைப் பிறவிப் பிணி மருவாது; பிறவாப் பெரு நிலையினை வழங்க வல்லது அந்தத் தேன். அத்தேனை அருளியவர் வாதவூர்த் தலைவராகிய மாணிக்க வாசகர். மாணிக்கத் திருமொழியாம் திருவாசகத்தின் பெருமையினைத் 'தேன்' என்று உருவகமாக்கிய படிமத்தின் பாங்கினை இப்பாயிரப் பாடல் தெளிவுறுத்துகின்றது.

உருவகப் படிமத்துக்குத் திருவாசகத்துள் ஓர் எடுத்துக்காட்டினைக் காண்போம்.

சிவபிரானை மருந்தென ஓதிய ஒரு பாடலை முன்னே கண்டோம். அதே மருந்து உருவகம் மற்றொரு பாடலிலே படிமக் காட்சி வழங்குவதை இங்கே காணலாம்.

வெற்றெனத் தொடுத்தலாய்ப் பயனில் சொற்களையே பன்னிப்பேசி குறிக்கோள் என ஏதுமின்றி—உள்ளீடற்ற உலுத்தர்களைப் பாராட்டி வாழும் வாழ்க்கையை நாம் அறிவோம். பேச்சு என எடுக்கும் எச்சொல்லுக்கும் இலக்காக உள்ள இறைவனின் புகழைப் பேசி அறியோம். சொல்லினைக் கடந்து, சொல்லின் பொருளையும் கடந்தது பரம்பொருள். பேசும் பொருளுக்கு இலக்கியமாய் உள்ள அப்பரம் பொருளைக் குறித்துப் பேசும் வார்த்தையே வார்த்தை; அவ்வார்த்தையே மாசில் மணியின் மணிவார்த்தை. அவ்வார்த்தையைப் பேசிப் பேசிப் பிறப்பறுக்கலாம். அந்த மாசில் மணியின் மணிவார்த்தைக்கு இலக்காக உள்ள பெருந்துறைப் பெருமான் அவ்வார்த்தை பேசியோரின் பிறப்பினை அறுப்பான். பிறவிப் பிணிக்கு மருந்தாவான் அப்பெருமான்.

இவ்வாறு படர்க்கையாகப் பேசாமல் தன்மைச் சொல்லிலேயே பிறவிப் பிணி நீங்கிய பாங்கினை உருவகப் படிமக் காட்சியாக வழங்குகிறார் மணிவாசகர்.

பேசும் பொருளுக்கு
இலக்கிதமாம் பேச்சிறந்த
மாசில் மணியின்
மணிவார்த்தை-பேசிப்
பெருந்துறையே என்று
பிறப்பறுத்தேன் நல்ல
மருந்தினடி என்மனத்தே
வைத்து.

(திருவாசகம்: பண்டாய நான்மறை 7)

திருவண்டப் பகுதியுள் ஓர் இடத்தே இறைவன் தன்மை கூறப் புகுந்த மணிவாசகர்.

இல்நுழை கதிரின் துன்அணுப் புரையச்
சிறிய வாகப் பெரியோன்.

(திருவாசகம்: திருவண்டப்பகுதி 5-6)

எனக் குறிப்பிடுகிறார். சிறுமை, பெருமை என்ற முரண்தொடைப் படிமமாகச் 'சிறிய வாகப் பெரியோன்' என்னும் தொடர் அமைகின்றது. மேலும் இல்லத்தினுள் நுழைகின்ற கதிரவன் கிரணத்துள் முட்டி மோதிச் சுழன்று கொண்டேயிருக்கும் அணுத்திரள்களை உவமையாகச் சுட்டியிருப்பது மிகச் சிறந்த உவமப் படிமமாகும். இல்நுழை கதிரின் அணுக்களின் செறிவும் சுழற்சியும் எண்ணிறந்த பாங்கும் எண்ணிப் பார்த்து அளக்க முயலலாமேயன்றி எண்ணி முடித்துக் கணித்திட முடியாது. அக்கதிருள் பொருந்தும் அணுத்திரள்போலே அண்டத்தில் சுற்றிச் சுழலும் கோளங்கள் கணக்கற்றவை; அச்சுழற்சியின் அழகினைப் பகரவல்லார் எவருளர்?! எண்ணற்றவை, எண் கடந்தவை, எண்ண எண்ண எட்டாதவை, எழில் கொழிப்பவை......

அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந்தன்மைவளப் பெருங்காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன.

(திருவாசகம்: 1-4)

என்ற விளக்கத்தினைக் கொண்டு பொலிவது.

இல்நுழை கதிரின் துன்அணுப் புரைய என்ற உவமைப் படிமம். இப்படிமத்தின் விளக்கத்தை மனங்கொண்டு ஒழிவற நிறைந்த ஒருவன் நுண்ணியனுயும் விரிந்தோனுயும் உரையுணர் விறந்த ஒருவனுயும் இருப்பதை உய்த்துணர வேண்டும். இவ்வுவமப் படிமத்தின் திறம் இதுவாகும்.

சோதியே சுடரே சூழொளி விளக்கே'

(திருவாசகம் அருட்பத்து 1)

என இறைவனை ஒளிச் சார்பினுக வருணிப்பார் மணிவாசகர். இவ்வொளிக் குறிப்பினையே,

ஓராதார் உள்ளத்து
ஒளிக்கும் ஒளியானே.

(திருவாசகம்: சிவபுராணம் 68)

என்றும் அவரே வருணித்துள்ளார். இங்கே ஒளி என்ற வருணனையானது கற்பனை நோக்கில் வேறு ஓர் உண்மையை விளக்குவதான வருணனைப் படிமமாக அமைகின்றது. ஒளி வடிவினன்; ஆயினும், தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகப் பெறுதார் உள்ளத்தில் ஒளிந்து கிடக்கும் ஒளி என்னும் வருணனை பிறிதொரு குறிப்பினைச் சிறப்புற வழங்கும் வருணனைப் படிமமாகிறது.

ஐம்புலன்களின் சார்புடைய புலன் வழிப்படிமங்களும் திருவாசகத்துள் உண்டு. புலனுணர்வொடு உணர்ச்சிச் செறிவும் உடையதாகப் படிமம் அமைய வேண்டும். புலனுணர்வுப் படிமங்களில் கட்புலப் படிமம் சிறப்புடையது. கட்புலப் படிமத்தைக் காட்சிப் படிமம் எனலாம்.

'சிந்தனைநின் தனக்காக்கி' எனத் தொடங்கும் திருச்சதகப் பாடலில்,

............ஐம் புலன்களார
வந்தனை ஆட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
மாலமுதப் பெருங்கடலே மலையே உன்னைத்
தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித்
தனிச்சுடரே இரண்டுமிலித் தனியனேற்கே.

(திருவாசகம்: திருச்சதகம் 26)

என்ற வரிகள் காட்சிப் படிமத்துக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். கடல்,

மலை, தாமரைக்காடு, சுடர் என்ற காட்சிப் பொருள்கள் படிமங்களாக வந்துள்ளன. சொல்வலைப்படாச் சோதியனாகிய கடவுளை—பரம்பொருளை நம்மனோர்க்கு எட்டும் கைக்கனியாக ஆக்குதற்குப் படிம உத்தி இங்கே பயன்பட்டுள்ளது. மணிவாசகரின் உள்ளத்து எழுந்து செறிந்த கருத்து, நம் அகத்தே பரந்து செறிந்து கிளர்ந்தெழுவதற்கு இத்திருப்பாடலின் படிமம் உதவுகின்றது.

கடல்—பெருங்கடல்—அமுதப்
பெருங்கடல்—மால் அமுதப்
பெருங்கடல்

என அடையொடு செறிவுற்று அடுக்காக வரும்போது கட்புலனாகும் கடல் கருத்துச் செறிவுடைய படிமமாக மணிவாசகரின் உணர்வொடு நம் உணர்வைப் பிணிக்கிறது. அப்படியே 'செந்தாமரைக் காடு அனைய மேனித் தனிச் சுடர்' என்ற தொடரும் அமைகின்றது.




சிவ - சக்தி ஆலயம், திருவொற்றியூர் - சென்னை.
திரு. எஸ். ஜி. சேஷகிரி - கோவை

காட்சிப் படிமம் போலவே பிற புலனுணர்வு வாயிலான படிமங்களும் உள; கட்டுரை வரையறை கருதி, விரிவும் விளக்கமும் தராமல் சில எடுத்துக் காட்டுகள் மட்டுமே இங்கே தரப்பெறுகின்றன.

கருங்குழற் செவ்வாய் வெண்ணகைக்
கார்மயில்
—காட்சிப் படிமம்
(திருவாசகம்: போற்றித்
திருஅகவல் 30)

தேனே அமுதே கருமபின்
தெளிவே சிவனே.
—சுவைப் படிமம்
(திருவாசகம்: திருச்சதகம் 55)

இருப்பு நெஞ்ச வஞ்சனேன்.
—ஊற்றுப் படிமம்
(திருவாசகம்: 80)

...மந் தாரத்தில் தாரம்
பயின்றுமந் தம்முரல் வண்டு
அதும்புங் கொழுந்தேன்.
—ஓசைப் படிமம்
(திருவாசகம்: நீத்தல்
விண்ணப்பம் 36)

ஏலக்குழலி —நாற்றப் படிமம்
(திருவாசகம்: திருவெம்பாவை 5)

திருவாசகம் என்னும் நூற்பெயரும் மணிவாசகர் அல்லது மாணிக்கவாசர் என்னும் நூலாசிரியர் பெயரும் படிம அடிப்படை கொண்டனவே யாகும். திருவாசகம் முழுவதிலுமுள்ள படிமங்கள் பற்றி மிக விரிவான ஆராய்ச்சி மேற்கொள்ளுதற்கு இடம் உண்டு. சிற்சில குறிப்புகளை எடுத்துக்காட்டும் அளவிலேயே இக்கட்டுரை அமைந்தது.

(இக்கட்டுரை உருவாக்க உதவிய டாக்டர், ம. ர. போ. குருசாமி அவர்களுக்கு நன்றியுடையேன்).

*

# வேத விளக்கம்

**வேதம் என்பதின் பொருள் :**

'வேதம்' என்ற சொல் சம்ஸ்கிருத மொழியின் 'வித்' என்ற பகுதியின் அடியாகப் பிறந்தது. 'வித்' என்றால் அறிதல் என்று பொருள். எனவே வேதம் என்பதற்கு (பரம்பொருளை) அறிதலை உணர்த்தும் நூல் என்பது விளக்கமான பொருளாகும்.

**சுருதி என்பதின் விளக்கம் :**

வேதம் மனிதர்களது வாக்கல்ல. வேதம் அநாதி. கர்ணபரம்பரைக்கோ சரித்திர ஆராய்ச்சிக்கோ எட்டாத அவ்வளவு பூர்வீகமானவைகள் வேதங்கள். வேதத்தின் பற்பல பகுதிகள் பற்பல ரிஷிகளால் அவர்களின் ஆன்மீக ஞான தத்துவ தரிசனத்தால் கண்டு பிடிக்கப்பட்டவையாகும். வேதத்தின் ஒரு பகுதி ஒரு குறிப்பிட்ட ரிஷி மூலமாக வந்ததென்றால், ஏற்கெனவே இருந்த அரிய உயரிய உண்மைக் கருத்தை அவர்தம் ஆன்மீக ஞான ஒளியால் கண்டார் என்பதுதான் பொருளேயன்றி அந்த வேத மந்திரம் அவருடைய கருத்தன்று. ரிஷி என்பவர் 'மந்த்ர-த்ரஷ்டா'. அதாவது மந்திரத்தைப் பார்ப்பவர் என்பதாம். வேதம் ஆதி காலத்தில் புத்தக ரூபமாக எழுதி வைக்கப்படவில்லை. குரு சிஷ்ய பரம்பரை ரீதியில் ஓதியுணர்ந்து பல்லாயிரம் ஆண்டுகளாகக் காப்பாற்றப்பட்டு வந்திருக்கின்றன. சிஷ்யன் குரு வாயிலாகக் காதால் கேட்டறிந்து வந்ததால் வேதத்திற்கு 'சுருதி' என்ற பெயர் உண்டாயிற்று. 'சுருதி' என்ற சொல் 'ச்ரு' என்னும் பகுதியினின்று பிறந்தது. இதன் பொருள் கேட்டல் என்பதாகும்.

**நான்கு வேதங்கள் :**

வேதம் ஆதியில் ஒன்றாக இருந்தது. அதை வியாச மகரிஷி நான்காகப் பிரித்துத் தம் சிஷ்யர்கள் மூலம் உலகில் பரவச் செய்தார். அவை 'ரிக்', 'யஜுர்', 'ஸாமம்', 'அதர்வம்' எனும் நான்காகும். அவைகளைப் பற்றிய விளக்கங்கள் கீழ்வருமாறு;

1. ரிக் வேதம் : இதன் ரிஷி பைலர். இது வேதங்கள் நான்கினுள் முதன்மையானது; மிகமிகப் பழமையானது. இதில் அடங்கியள்ளவை:

மண்டலங்கள் 10, ரிக்குகள் 10170, சாகைகள் 21, ஸம்ஹிதை 1, (ரிக் வேத ஸம்ஹிதை), ப்ராஹ்மணங்கள் 4, (கௌஷீதகீ, ஐதரேய, பைங்கி, ஸத்யாயன), உபநிஷத்துக்கள் 2, (ஐதரேய, கௌஷீதகீ). ரிக் வேதத்தின் ரிக்குகள் தேவதைகளைக் குறித்துச் செய்துள்ள துதிகளாகும். எனவே இந்த வேதத்திற்கு 'ஸ்துதிபரா' எனும் சிறப்புப் பெயர் வந்தது.

2. யஜுர் வேதம்: இதன் ரிஷி வைசம்பாயனர். இது ரிக் வேதத்தில் மூன்றில் இரண்டு பங்கு (2/3) அளவுள்ளது. இதில் அடங்கியுள்ளவை:

ரிக்குகள் 6780, சாகைகள் 109, (சுக்ல யஜுஸ்-15, கிருஷ்ண யஜுஸ்-94), ஸம்ஹிதைகள் 2, (வாஜஸநேயி, தைத்ரீய), ப்ராஹ்மணங்கள் 5, (சதபத, தைத்ரீய, வல்லபி, ஸத்யாயனி, மைத்ராயனி), உபநிஷத்துக்கள் 8, (ஜாபால, ஈஸாவாஸ்ய, ப்ருஹதாரண்யக, கட, கைவல்ய, ஸ்வேதாஸ்வதர, தைத்ரீய, நாராயண), யஜுர் வேதத்திலுள்ள மந்திரங்கள் பெரும்பாலான சடங்குகள், யஜ்ஞங்கள் ஆகிய கிரியைகளுக்குப் பயன்படுவதால் இதற்கு 'க்ரியாபரா' என்றொரு சிறப்புப் பெயரும் உண்டு.

3. ஸாம வேதம்: இதன் ரிஷி ஜைமினி. இந்த வேதம் ரிக் வேதத்தில் பாதி (1/2) அளவுள்ளது. இதில் அடங்கியுள்ளவை:

ரிக்குகள் 5085, சாகைகள் 1000, ஸம்ஹிதை 1, (ஸாமவேத ஸம்ஹிதை), ப்ராஹ்மணங்கள் 8, (சாந்தோக்யம், மந்த்ரம், ஆர்ஷேயம், வம்சம், தைவதாத்யாயம், தலவகார, தாண்ட்ய, ஸம்ஹிதோபநிஷத் ப்ராஹ்மாணம்), உபநிஷத்துக்கள் 2, (சாந்தோக்ய, கேன), ஸாம வேதத்திலுள்ள எல்லா மந்திரங்களும் ஞானத்தோடும், இசையோடும் ஓதப்படுபவையாதலால் இவ்வேதத்திற்கு 'ஞானபரா' எனும் சிறப்புப் பெயருண்டாயிற்று.

4. அதர்வ வேதம்: இதன் ரிஷி ஸமந்து. இவ்வேதம் ரிக் வேதத்தில் பாதி (1/2) அளவுள்ளது. இதில் அடங்கியுள்ளவை:

*சித்தாந்தி E. சம்பந்தாச்சாரி,*
*கோவில்பதாகை*

ரிக்குகள் 5085, சாகைகள் 50, ஸம்ஹிதை 1, (அதர்வ வேத ஸம்ஹிதை), ப்ராஹ்மணம் 1, (கோபத), உபநிஷத்துக்கள் 4, (ப்ரஸ்ன, முண்டக, மாண்டூக்ய, ந்ருஸிம்ஹதாபினீ), அதர்வ வேதத்தில் பிரார்த்தனை, ஹோமம், மந்திரித்தல், மந்திரங்களை ஜபித்து உருவாக்கும் ரக்ஷை, யந்திரம் ஆகிய இவைகள் மூலமாக தீய சக்தி, பிணி முதலியவைகளை நிவர்த்திக்கும் வழி முறைகள் விளக்கப்பட்டுள்ளன. இந்த வேதத்தில் 114 சுலோகங்கள் வைத்திய சாஸ்திர சம்பந்தப்பட்டவைகள். ஒஷதைகள் மூலம் பிணிகளை நீக்கும் எல்லா மருத்துவ முறைகளும் விளக்கப்பட்டுள்ளன. எனவே உலகத்தின் மிகப் பழமையான மருத்துவ சாஸ்திரம் என்றும் இதனைக் கூறலாம்.

**சாகைகள் :**

வியாசர் நான்கு வேதங்களையும் பிரித்தபோது மொத்தம் 1180 சாகைகளாகச் செய்தார். சாகைகள்

என்றால் பிரிவுகள் என்று பொருள். ஒரு சாகையையாவது முழுதும் செவ்வையாக அத்யயனம் செய்யாதவன் வேதியன் என்பதற்குத் தகுதியற்றவன் என்பது பண்டைய கோட்பாடு. ஒவ்வொரு சாகையிலும் 'கர்ம காண்டம்' 'ஞான காண்டம்' என இரு பிரிவுகள் உள்ளன. கர்ம காண்டம் யஜ்ஞங்கள், சடங்குகள், கிரியைகள் முதலியவைகளைச் செய்யும் முறைகளையும், வெவ்வேறு நிலையிலுள்ளவர் கடமைகளையும் விளக்கிக் கூறுகின்றது. ஞானகாண்டம் உபநிஷத்து, வேதாந்தம், வேதத்தின் சாரம், வேதத்தின் முடிவான நோக்கம் இவைகளைச் சிறக்கக் கூறுகின்றது. கர்ம காண்டத்தில் 'மந்த்ரம்'. 'ப்ராஹ்மணம்' (உபாஸனா மார்க்கம்) எனும் இரு உட்பிரிவுகள் உள்ளன.

**உபநிஷத்துக்கள் :**

'உபநிஷத்' என்பதன் பொருள் (உப+நி+ஷத்) உப-சமீபம் (ஆச்சாரியன் அருகிலமர்ந்து பெறும் உபதேசம்) நி-நிச்சயமாக,ஸத்-ஸாதயதி-களைகிறது (துன்பத்தைக் களைந்து பேரின்பத்தைக் கூட்டு விக்கின்றது) என்பதாம். உபநிஷத் வேதத்தின் கடைப் பகுதியாகும். எனவே இது வேதாந்தம் (வேத+அந்தம்) எனப் படும். உபநிஷத்துக்கள் 108 ஆகும். இவைகளில் பெரும்பான்மை கிடைத்தற்கரியதாகி விட்டன. வேதப் பிரிவுகளில் முன் விளக்கிய பதினாறு உபநிஷத்துக்களையே ஆதிசங்கரர் முக்கியமாகக் குறிப்பிட்டுள்ளார். அவைகளில் கீழ்காணும் பத்து உபநிஷதங்களுக்குப் பாஷ்யம் செய்திருக்கிறார். அவையாவன:

"ஈசகேன கட ப்ரச்ன
முண்ட மாண்டூக்ய தித்திரி: |
ஐதரேயஞ்ச சாந்தோக்யம்
ப்ருஹதாரண்யகம் ததா ||"

1. ஈஸாவாஸ்ய உபநிஷத் (சுக்ல யஜுஸ்) 2. கேன உபநிஷத் (ஸாமம்) 3. கட உபநிஷத் (கிருஷ்ண யஜுஸ்) 4. ப்ரஸ்ன உபநிஷத் (அதர்வம்) 5. முண்டக உபநிஷத் (அதர்வம்) 6. மாண்டூக்ய உபநிஷத் (அதர்வம்) 7. தைத்ரீய உபநிஷத் (கிருஷ்ண யஜுஸ்) 8. ஐதரேய உபநிஷத் (ரிக்) 9. சாந்தோக்ய உபநிஷத் (ஸாமம்) 10. ப்ருஹதாரண்யக உபநிஷத் (சுக்ல யஜுஸ்).

இப்பத்து உபநிஷத்துக்களும் மிக முக்கியமானவை. ஸ்ரீமத் பகவத் கீதை இவைகளின் சாரமாகவே அமைந்துள்ளது. தத்துவ விளக்கத்திற்கு முடிவான பிரமாணமாக உபநிஷத்துக்கள் அமைந்திருக்கின்றன. நான்கு வேதங்களிலும் ஞானகாண்டமாகத் திகழ்பவை உபநிஷத்துக்களாகும். இந்த உபநிஷத்துக்கள் புகட்டுவது வேதாந்தம். வேதாந்தத்தை அநுஷ்டிக்கும் சாதகன் பிரம்ம ஞானியாக விளங்குகிறான். பிரம்ம ஞானத்தையுடையனே ப்ராஹ்மணனாகிறான்.

"ப்ரஹ்ம ஜ்ஞானாந்து ப்ராஹ்மண: |"

பிரம்ம ஞானம், பரஞானமாகிய மெய்ப் பொருள் அறிவு. வேதமாகிய விருக்ஷத்தில் உபநிஷத்துக்களாகிய புஷ்பங்கள் உள்ளன. அவைகளின் பழம் பிரம்ம ஞானம்.

**பிரம்ம ஸூத்திரம் :**

உபநிஷதங்களுக்கு உத்தர மீமாம்சை ஸூத்திரங்களைச் செய்தவர் வியாச மகரிஷி. இது 'பிரம்ம ஸூத்திரம்' என சிறப்பாகக் கூறப்படுகின்றது. இதில் 192 அதிகரணங்கள் உள்ளன. பல ஸூத்திரங்கள் சேர்ந்து ஒரே விஷயத்தை விசாரம் செய்யும் பகுதிக்கு ஒரு 'அதிகரணம்' என்று பெயர். இந்த பிரம்ம ஸூத்திரத்திற்கு ஆதிசங்கரர் பாஷ்யமும், ஸுரேசுவராச்சாரியார் (மண்டனமிசிரர்) வார்த்திகமும் செய்துள்ளார்கள். இதற்கு 'வேதாந்த ஸூத்திரம்' என்று மற்றொரு பெயரும் உண்டு.

இதுவரை நான்கு வேதங்களைப் பற்றியும், அவைகளின் சாகைகளைப்

பற்றியும், உபநிஷத்துக்களைப் பற்றியும், பிரம்ம ஸூத்திரத்தைப் பற்றியும் தெளிந்தோம். இனி வேதங்களின் ஆறு அங்கங்களாக (ஷடங்கங்களாக) விளங்கும் 1. சிக்ஷா, 2. வியாகரணம், 3. சந்தஸ், 4. நிருக்தம், 5. ஜோதிஷம், 6. கல்பம் என்பவைகளைப் பற்றியும் சிறிது தெரிந்து கொள்வோம்.

1. 'சிக்ஷா' என்பது அக்ஷரங்களை உச்சரிக்கவேண்டிய முறையை விளக்குவதாகும். சம்ஸ்கிருதத்தில் 51 அக்ஷரங்கள் உள்ளன. இவ்வக்ஷரங்களைப் பிழையின்றி உச்சரிக்க வேண்டிய முறைகள், அவைகளின் மாத்திரைகள், அவைகள் சந்தியில் அடையும் மாறுபாடுகள் ஆகிய இவைகளைப் பற்றி நன்கு விளக்குவது சிக்ஷா. மற்றும் இன்ன அக்ஷரத்திற்கு இன்ன ஸ்வரம் என்றும் இதில் விளக்கப்பட்டுள்ளது. எனவே எழுத்துக்களுக்கு ரக்ஷையாக இருப்பது சிக்ஷா. சிக்ஷைகள் முப்பது இருப்பதாகத் தெரிகின்றது. எனினும் அவற்றுள் முக்கியமானவைகள் கீழ்வரும் ஆறு சிக்ஷைகளாகும்:

1. நாரதீய சிக்ஷா, 2. பாணினி சிக்ஷா, 3. பாரத்வாஜ சிக்ஷா, 4. வ்யாஸ சிக்ஷா, 5. வாஸிஷ்ட சிக்ஷா, 6. யக்ஞவல்க்ய சிக்ஷா. சிக்ஷாக்களுள் யக்ஞவல்க்ய சிக்ஷா மிக விசேஷமானதாகக் கருதப்படுகின்றது.

2. 'வியாகரணம்' என்பது இலக்கணம். ஸ்ரீ நடராஜப் பெருமான் ஸந்த்யா காலத்தில் தம் தாண்டவத்தை முடிக்கும் சமயத்தில், தம் கையில் இருந்த டமருகத்தை (உடுக்கையை) 14 முறை ஒலிக்க, அதிலிருந்து எழுந்த 14 சப்தங்களைக் கொண்டு, 14 ஸூத்திரங்களாக வியாகரணத்திற்கு மூலமாக வைத்து, பாணினி என்பவர் 'அஷ்டாத்யாயீ' எனும் நூலைச் செய்தார்.

ந்ருத்தாவஸானே நடராஜராஜ:
நநாத டக்காம் நவ பஞ்ச வாரம் |
உத்தர்துகாமஸ் ஸனகாதி ஸித்தான்
ஏதத்விமர்சோ சிவஸூத்ர ஜாலம் ||

அ இ உண் | ருலுக் | ஏ ஓங் | ஐ ஔச் | ஹயவரட் | லண் | ஞமஙணநம் | ஜ்ஜபஞ் | க்கட்டத்தஷ் | ஜபகடதஸ் | க்கப்பச்சடத்த சடதவ் | கபய் | ஸஷஸர் | ஹல் |

இப்பதினுன்கு ஸூத்திரங்களே பாணினியின் வியாகரணத்திற்கு அடிப்படையாகும் என்பதுவேத விற்பன்னர்களின் ஆராய்ச்சியுமாகும். வியாகரணங்கள் 9 வகைப்படும் அவை கீழ்வருமாறு:

1. ஐந்த்ரம், 2. ஸாந்தம், 3. காஸக்ருத்ஸ்னம், 4. கௌமாரம், 5. ஸாகடாயனம், 6. ஸாரஸ்வதம், 7. ஆபிஸலம், 8. ஸாகலம், 9. பாணினீயம்.

இப்பொழுது வழக்கிலுள்ள வியாகரண நூல்களுள் மிகப்பழமையானது 'பாணினீயம்' எனும் வியாகரண நூலேயாகும். இது 8 அத்தியாயங்களைக் கொண்டதால் 'அஷ்டாத்யாயீ' எனும் சிறப்புப் பெயர் பெற்றது. ஒவ்வொரு அத்தியாயத்திலும் 4 பாதங்களாக மொத்தம் 32 பாதங்கள் உள்ளன. இதில் 29 பாதங்களை ஒரு பகுதியாகவும், மீதி 3 பாதங்களை மற்றொரு பகுதியாகவும் பாணினி வகுத்திருக்கிறார். பாணினியின் வியாகரணத்திற்கு வரருசி ஒரு வார்த்திகம் செய்திருக்கிறார்; பதஞ்ஜலி பாஷ்யம் செய்திருக்கிறார். பட்டோஜி தீக்ஷிதர் என்பவர் 'ஸித்தாந்த கௌமுதி' என்று பாணினியின் ஸூத்திரங்களுக்கு ஒரு வியாக்கியானம் செய்திருக்கிறார். இந்த ஸித்தாந்த கௌமுதிக்கு முன்பு 'ரூபாவ்தாரம்' என்னும் வியாகரண சாஸ்திரம் பிரசித்தமாக இருந்தது. 'நவ வியாகரணம்' என்றும் ஒன்று உண்டு. இதை ஹனுமன் சூரிய பகவானிடத்தில் பயின்றதாக வரலாறு. 'ஐந்திரம்' எனும் வியாகரணத்தை இந்திரன் இயற்றினர் என்று கூறப்படுகின்றது. இவ்வாறு பல வியாகரணங்கள் இருப்பினும் 'ஸித்தாந்த கௌமுதி' என்பதுதான் மிகவும் பிரசித்தி பெற்றுள்ளது. இது பாணினீய வியாகரண விளக்கம் என்பது முன்னரே வாசகர்கட்குத் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

3. 'சந்தஸ்' என்பது மந்திரங்களின் சப்தங்களை ரக்ஷிப்பது. மந்திரங்களெல்லாம் பெரும்பான்மை செய்யுள் வடிவில் அமைந்துள்ளவை. அச்செய்யுள்கள் எவ்வித சந்தஸ்ஸில் அமைந்துள்ளன என்பதை விளக்கும் சாஸ்திரத்திற்குச் 'சந்தஸ்' எனப் பெயர். செய்யுட்கள் பலவகைப் பட்டதாக இருப்பதால் சந்தஸ்ஸுகளும் பலவகைப்படும். அவை காயத்ரீ, உஷ்ணிக், அனுஷ்டுப், ப்ருஹதி, பஙக்தி, த்ரிஷ்டுப், ஜகதி முதலியனவாகும். சந்தஸ்ஸினுல்தான் செய்யுட்களுக்கு அதாவது ஸ்லோகங்களுக்கு பூரணப் பொலிவும், மதுரமும் உண்டாகின்றன. வேத மந்திரங்களெல்லாம் சந்தஸ். சந்தஸ் மந்திரங்களுக்குப் பிராணனுக இருக்கின்றது. சந்தஸ்ஸைச் சொல்லி மூக்கைத் தொடுவதின் காரணம், சந்தஸ் மந்திரத்திற்குப் பிராணனுக இருக்கின்றது என்பதை விளக்கவே. எனவே மந்திரங்களுக்கு சந்தஸ் ஆதாரமாக விளங்குகின்றது.

4. 'நிருக்தம்' என்பது சொற்களின் பொருள்களை நன்கு விளக்கும் நூல். இது வேதத்திற்கு அகராதி போன்றது. வேதத்திலுள்ள அரிய பெரிய வார்த்தைகட்கு இன்னின்ன பொருட்கள் என்று இந்நூல் விளக்குகின்றது. ஆதலால் இதற்கு 'வேத நிகண்டு' என்றும் பெயர். நிருக்தத்தில் ஒவ்வொரு பதத்திற்கும் அதன் அர்த்தம், பிரயோகம் ஆகியவைகளைக் காரணத்துடன் ஆராய்ந்து விளக்கப்பட்டுள்ளது. நிருக்தம் பலரால் செய்யப்பட்டிருப்பினும் யாஸ்க மகரிஷி செய்த நிருக்தம்தான் பிரசித்தமானது. இதில் 'நைகண்டுகம்', 'நைகமம்', 'தைவதம்' என மூன்று காண்டங்களும், பன்னிரண்டு அத்தியாயங்களும் உள்ளன.

நைகண்டுகத்தில் பத விபாகங்களும், ஒரு பொருள் கொண்ட பல சொற்களின் ஆராய்ச்சியும் விளக்கப் பட்டுள்ளது. நைகமத்தில் பல பொருள்களைக் கொண்ட ஒரு சொல்லின் ஆராய்ச்சி கூறப்பட்டுள்ளது. தைவதத்தில் தேவதைகளின் விபாகங்களும் அவைகளைப் பற்றிய ஆராய்ச்சியும் விளக்கப்பட்டுள்ளது.

5. 'ஜோதிஷம்' என்ருல் ஜோதி ஸ்வரூபமாக ஆகாச வெளியில் பிரகாசித்துக் கொண்டிருக்கும் நக்ஷத்திரங்களைப் பற்றியும், கிரகங்களைப் பற்றியும், அவைகளின் ஸ்திதி கதிகளைப் பற்றியும், லோகத்திற்கு அவைகளால் உண்டாகும் நன்மை தீமைகளைப் பற்றியும், கணித ஆராய்ச்சிப் பூர்வமாக விளக்கிக் கூறும் நூல் எனப்படும். ஜோதிஷ சாஸ்திரம் 'ஸித்தாந்த ஸ்கந்தம்', 'ஹோரா ஸ்கந்தம்', 'ஸம்ஹிதா ஸ்கந்தம்' எனும் மூன்று ஸ்கந்தங்களையுடையது. எனவே ஜோதிஷ சாஸ்திரத்திற்கு 'ஸ்கந்த த்ரயாத்மகம்' என்ற சிறப்புப் பெயரும் உண்டு.

ஸப்த ரிஷிகளும், தேவர்களும், பல ஜோதிஷ சாஸ்திரங்களைச் செய்திருக்கிருர்கள். 'சூரிய சித்தாந்தம்' எனும் நூல் சூரியன் மயனுக்கு உபதேசித்ததாகக் கூறப்படுகின்றது. இன்றைக்குச் சுமார் 1850 ஆண்டுகட்கு முன் பிருந்த வராஹ மிஹிரர் செய்த 'பஞ்ச சித்தாந்திகா' எனும் வான சாஸ்திரமும், 'பிருஹத் ஜாதகம்', பிருஹத் ஸம்ஹிதை ஆகிய ஜோதிஷ நூல்களும் மிகப் பிரசித்தமானவை. ஆரிய பட்டர் செய்த 'ஆரிய பட்டீயமும்', பாஸ்கராச்சாரியார் செய்த 'சித்தாந்த சிரோமணி'யும் மிக அரிய நூல்களாகும். ஸப்த ரிஷிகள் அருளிய 'ஸப்தரிஷி நாடி'யும், பிருகு மகரிஷியால் அருளப்பெற்ற 'பிருஹு ஸம்ஹிதா நாடி'யும், உலகப் பிரசித்தியானவை. மற்றும் 'பராசரஹோரை', 'வராஹ ஹோரை', 'பல தீபிகை', 'சாராவளி', 'ஸர்வார்த்த சிந்தாமணி' 'ஜாதக பாரிஜாதம்' போன்ற பல நூல்கள் ஜோதிஷ உலகில் பிரசித்தமானவைகள்.

இந்நூல்களின் உதவியால் கிரக நிலை, பலம் இவைகளை ஆராய்ந்து அறிந்து ஜாதகப் பலன் மூலம் லோக மாந்தர்கட்குண்டாகும் சுக துக்கங்களை நிர்ணயித்து, அதற்குத் தக்கவாறு வாழ்க்கையை அமைத்து, சுப வேளைகளைத் தேர்ந்து, காரியங்களில் ஈடுபட்டு, அமைதியான சுகவாழ்வு வாழ ஆன்ருேர்களாகிய மகரிஷிகள் நமக்கு இத்தகு ஜோதிஷ சாஸ்திரத்தை வேதத்தில் ஒரு முக்கியமான அங்கமாக நன்கு அமைத்துள்ளார்கள்.

6. 'கல்பம்' வைதீகர்கள் தத்தம் வருணம், ஆசிரமம் இவைகளுக்கேற்பச் செய்ய வேண்டிய கர்மாக்களைச் செய்யும் விதி முறைகளை விளக்கிக் கூறுகின்றது. கல்பத்திற்கு ஜோதிஷ சாஸ்திரத்தின் உதவி முழுதும் தேவை. ஜோதிஷத்தினுல்தான் காலத்தைத் தெரிந்து கொண்டு கர்மாக்களைக் கல்ப ஸூத்திரங்களில் சொல்லியபடிச் செய்ய முடியும். இக் கல்ப சாஸ்திரத்தை அநேக ரிஷிகள் செய்திருக்கிருர்கள். ஆஸ்வலாயனர், ஆபஸ்தம்பர், போதாயனர், வைகானஸர், ஸத்யாஷாடர், பாரத்வாஜர், அக்னிவேசர், காத்யாயனர், த்ராஹ்யாயணர், ஜைமினி, ஹிரண்யகேசர் ஆகியோர் கல்ப ஸூத்திரங்களைச் செய்திருக்கிருர்கள். இவை 'க்ருஹ்ய ஸூத்திரம்' 'ஸ்ரௌத ஸூத்திரம்' என இருவகைப்படும். க்ருஹ்ய ஸூத்திரத்தில் பூர்வாபரக்ரியைகள், பாக யஜ்ஞம், பஞ்ச மஹா யஞ்ஞம், ஷண்ணவ சிராத்தம் ஆகியவைகள் விளக்கப்பட்டுள்ளன. ஸ்ரௌத ஸூத்திரத்தில் யாக விதி முறைகள் கூறப்படுகின்றன. அக்னி ஹோத்திரத்தை ஆதாரமாகக் கொண்டு செய்யும் ஏழு ஹவிர்யஜ்ஞங்களும், ஏழு ஸோம யஜ்ஞங்களும் ஸ்ரௌத ஸூத்திரத்தில் விளக்கப்படுகின்றன. நமது பாபங்களை நிவர்த்திக்க நாம் சத்கர்மாக்களைச் செய்தல் வேண்டும். அதற்கு மந்திரம் விதி முறைகள் தெரிய வேண்டும்; தகுந்த திரவியங்கள் வேண்டும்; வாஸ்து லக்ஷணம் அமைந்த கிருகம் வேண்டும். பின்னர் நாம் செய்யும் கர்ம பலனைப் பகவானுக்கு அர்ப்பணித்தல் வேண்டும். இவ்விஷயங்களையெல்லாம் விளக்கிக் கூறுவதுதான் கல்ப சாஸ்திரம்.

எனவே மானுடன் தர்மத்தை ஆழ்ந்து ஆராய்ந்து அநுஷ்டித்து இக பர, சுகங்களையடையவே இத்தகு சாஸ்திரங்களாகிய அரிய பொக்கிஷத்தை நமது ஆன்ருேர்களாகிய மகரிஷிகள் புனிதம் நிறைந்த கருணை உள்ளத்தோடு நமக்கு வழங்கியுள்ளார்கள்.

வேதங்களும் உபநிஷதங்களும் விளக்கிக் காட்டும் உயர் வாழ்க்கையின் லக்ஷியங்களை ஓதியுணர்ந்து கடைப்பிடித்து வருங்கால இளந்தலைமுறையினர் பயனடையத் தக்க வழியில் நம் நாட்டுக் கல்வி ஸ்தாபனங்களும், சமூக வளர்ச்சிக் கழகங்களும், அறநிலையங்களும் சீரிய நோக்குடன் செயல்படுதல் மிக முக்கியமென்பதை உணர்தல் வேண்டும். உலகம் மோகக்களமாகவும், போகக் களமாகவும், போர்க்களமாகவும் காக்ஷியளிக்கும் இக்காலத்தில் சமய சமரஸத்துவத்தையும், பரஸ்பர அன்பையும், சீரிய வாழ்க்கையையும், அமைதியையும், ஆன்மீக ஒளியையும் உலக மாந்தரின் உள்ளத்திற்குத் தந்து உதவக் கூடியவை உபநிஷதங்களைப் போல் வேறு எவையும் இல்லை. நாம் நடத்தும் லௌகீகப் போலி வாழ்க்கைக்கும், நாம் சச்சரவிடும் அற்ப கொள்கைகளுக்கும், ஆணவத்திற்கும் ஆதரவு உபநிஷதங்களில் கிடைக்காது. உயர் லக்ஷியத்துடன் கூடிய சீரிய வாழ்க்கைத் தத்துவத்தையுணர்த்தி மனிதனைப் புனிதனுக்கி மேலாம் நிலைக்கு அழைத்துச் செல்லுவதே நமது வேதோபநிஷதங்களின் குறிக்கோளாகும். இவ்வுண்மையைத் தான் அவதார புருஷர்களும், ஆச்சாரியர்களும் பல நூற்றுண்டுகளாக உபதேசித்து வந்திருக்கிருர்கள். இவைகளை நாமும் நமது வருங்கால இளந்தலைமுறையினரும் நன்கு உணர்தல் வேண்டும்.



# வைணவம் வளரச் சில வழிகள்

உலகில் நிலவும் சமயங்கள் பல. அவற்றுள்ளும் பெரும்பாலான மக்களால் கடைப்பிடிக்கப்படும் சமயங்கள் சிலவே. சைவம், வைணவம், பௌத்தம், சைனம், கிறித்தவம், முகம்மதியம் என்பவை உலகப் புகழ் பெற்ற சமயங்கள். இவற்றுள்ளும் இந்திய நாட்டுக்கே உரிய சிறந்த சமயங்கள் சைவம், வைணவம் ஆகிய இரண்டு மட்டுமே! பௌத்தம், சைனம் ஆகிய இரண்டும் 'ஒழுக்கத்தை மட்டுமே உயர்த்திப் பேசுகின்றன. ஆனால், சைவமும் வைணவமும் ஒழுக்கத்தை வலியுறுத்திப் பேசுவதுடன் இறை நெறியையும் எடுத்தியம்பி மக்களைத் தெய்வ நிலைக்கே உயர்த்திக் காட்டி உலக மக்களைக் கவர்ந்துள்ளன.

எண்ணிலடங்காச் சமயங்கள் நம் நாட்டில் ஒரு காலத்தில் நிலவி வந்தன. அவற்றை முறைப்படுத்தி-வகைப்படுத்தி ஆறு சமயங்களாக நிறுவினர் நம் நாட்டுச் சமயச் சான்றோர். இவ்வறுவகைச் சமயங்களையும் சைவம், வைணவம் என்னும் இரண்டினுள் அடக்கிக் காட்டிப் பிற்காலச் சமயச் சான்றோர் நெறிப்படுத்தினர்.

சைவமே முதற்சமயம் என்றும், சிவனே பரம்பொருள் என்றும் சைவச் சமயச் சான்றோர் கூறுவர். வைணவமே முதற் சமயமென்றும், திருமாலே பரம்பொருள் என்றும் வைணவச் சான்றோர் விளக்குவர். ஆயினும் இவற்றுள் ஏதோ ஒன்றுதான் முதற் சமயமாக இருக்க வேண்டும். தென்னாடு மட்டுமன்றிப் பாரத நாடு முழுமைக்குமே வைணவ சமயம் ஒரு காலத்தில் முக்கிய சமயமாக இருந்து வந்திருக்கிறது என்பது நடைமுறையிலிருந்தும், வழிபாட்டு முறையிலிருந்தும், இலக்கியச் சான்றுகளிலிருந்தும், இன்னும் பிறவற்றிலிருந்தும் அறிய முடிகிறது.

எது எப்படியிருப்பினும் வைணவச் சமயம் மக்களால் பெரிதும் பரவலாகப் போற்றப்பட்டு வந்தது—வருகிறது என்பது உண்மை நிலையே! எனினும் இதன் வளர்ச்சி இன்றைய நிலையில் போதுமானதாக உள்ளதா என்பது பற்றிச் சிந்திக்க வேண்டிதான் உள்ளது. அனைவரும் விரும்பிப் போற்றும் வைணவம் வளரச் சில வழிகளை மேற்கொள்ள வேண்டியதன் அவசியத்தை நாம் தீவிரமாகச் சிந்திக்கத்தான் வேண்டும். எனவே, வைணவம் வளரச் சில வழிகளை இங்கே சுட்டிக் காட்ட முயல்வோம்.

ஆனால், ஆயிரம் ஆண்டுகளாக நிலவி வரும் வழிபாட்டு முறைகள், சடங்குகள் முதலானவை இந்த நூற்றுண்டுக்குப் பொருந்துமா? அயல் சமயங்களின் ஆக்ரமிப்பு மிகுந்து வரும் இந்நூற்றுண்டுக்கு ஏற்ற வகையில் வைணவ சமய நெறிகளில் சில சீர்திருத்தங்கள் செய்தே ஆக வேண்டும். வேதம் ஓதுதல் முதல் தேங்காய் உடைப்பது வரை சரியான இன்றைக்குப் பொருத்தமான திட்டங்களை வகுத்து உண்மையாகச் செயல்பட வேண்டும். மக்களால் எளிதில் கடைப்பிடிக்கத் தக்க வழிபாட்டு முறைகளை வகுத்துத் தந்து வைணவ சமய வளர்ச்சியில் மறுமலர்ச்சி காண முயல வேண்டும்.

**ஆழ்வார் பாடல்கள் :**

தமிழ் நாட்டு மக்களைப் பொறுத்த வரை வைணவ சமயத்தின் உயிர் நாடியாக ஆழ்வார்கள் அருளிச் செய்த திருப்பாடல்களே இருந்து வருகின்றன. இத்திருப்பாடல்களைச் சிறுசிறு பகுதிகளாக அச்சிட்டு மலிவு விலைக்கே வழங்க வேண்டும். வைணவத் திருக்கோயில்களில் ஆதிகாலந் தொட்டுத் திவ்யப் பிரபந்தங்களே ஓதப்பட்டு வந்ததாக அறிகிறோம். இம்முறையினை மீண்டும் புதுப்பித்து-உறுதியாகவும் தெளிவாகவும் கடைப்பிடித்துத் திவ்யப் பிரபந்தங்களை ஓதித் தமிழ் மக்கள் உள்ளங்களை மேலும் தெய்வ மணம் வீசுமாறு செய்தல் வேண்டும். பாட நூல்களிலும், கல்வித் துறையிலும் வைணவ சமயத்தை விளக்கும் பாடல்கள், கட்டுரைகள், வரலாறுகள் இடம் பெறுதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும்.

**மறுமலர்ச்சி :**

வைணவ சமயம் தோன்றிய காலத்திலிருந்து நிலவி வந்த வழிபாட்டு முறைகள், சடங்குகள் ஆகியவற்றைச் சுமார் ஆயிரம் ஆண்டுகட்கு முன்னர் ஸ்ரீ இராமாநுஜர் நெறிப்படுத்தினர். அவர் முயற்சியால் குமரி முதல் இமயம் வரை வைணவ சமயம் பரந்து விரிந்து சிறந்திருந்தது. வைணவப் பயிர் தழைக்க அவர் புல்லாற்றுனும் பாடுபட்டு வந்திருக்கிறார். அவருக்குப் பின்னர் அவதரித்த வைணவச் சான்றோர் வைணவத்தை வளர்ப்பதில் பெரிதும் ஈடுபாடு காட்டி வந்துள்ளதை அறிகிறோம். அன்று அவர்கள் வகுத்துத் தந்த ஆகம நெறிகளே இன்று வரை நம்மால் பின்பற்றப் பட்டு வருகின்றன.

மாருதிதாசன் — காஞ்சிபுரம்.

## திருப்பதியில்
## தங்கு வசதி காட்டேஜுகளின் கட்டண விவரங்கள்
(நாள் ஒன்றுக்கு)

**ஸ்ரீ வேங்கடேஸ்வரா தர்ம சத்திரம் :**

| | | |
|---|---|---|
| இரண்டு படுக்கைகளைக்கொண்டு மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை | ரூ. | 20-00 |
| நான்கு படுக்கைகளைக் கொண்டு மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை | ரூ. | 25-00 |
| ஒரு படுக்கையும், மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை | ரூ. | 15-00 |

**ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி :**

| | | |
|---|---|---|
| இரண்டு படுக்கைகளையும், குளிர்ச்சாதனம், மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை | ரூ. | 50-00 |
| ஒரு படுக்கையும் குளிர்ச்சாதனம் மற்றும் மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை | ரூ. | 30-00 |

**ஸ்ரீ வேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி :**

| | | |
|---|---|---|
| இரண்டு படுக்கைகளைக் கொண்டு மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை | ரூ. | 20-00 |

**கம்ப நாட்டாழ்வார் :**

தற்காலம் கம்பர் பெயரால் கழகங்கள் எங்கும் தோன்றி வருகின்றன. கம்ப நாட்டாழ்வாரின் கவிச் சுவையை அனைவரும் பருகி இன்புறுகின்றனர். இந்நிலையில் கம்பரை இனியும் ஆழ்வாராக ஏற்றுக்கொள்வதில் எவ்விதத் தயக்கமும் காட்டுதல் கூடாது. திருமாலின் அவதாரமாகிய இராமபிரானது சீர்மையினையும், சிறையிருந்தாளின் ஏற்றத்தையும் சிறப்புற எடுத்துக் காட்டும் கம்ப நாட்டாழ்வார் பாடல்களை உலகோர் அனைவரும் உவந்து கொண்டாடுகின்றனர். இந்நிலையில் கம்ப நாட்டாழ்வாரைக் கவிச்சக்கரவர்த்தியாக மட்டுமன்றி வைணவப் பெரியோராகவும் ஏற்றுக் கொள்வதால் வைணவம் வளர்ந்தோங்கும் என்பது வெள்ளிடை மலையன்றோ!

**பாகவதர்களைப் பாராட்டல் :**

வேதங்கள், திவ்யப் பிரபந்தங்கள், வியாக்யானங்கள் முதலானவற்றில் பிராமணர்களைப் போலவே, பிராமணர் அல்லாத பலரும் விற்பன்னராக விளங்கி வருகின்றனர். இவர்கள் வடமொழி, தென்மொழி ஆகிய இரண்டிலுமே வல்லுநர்களாகக் காணப்படுகின்றனர். பகவத் சம்பந்தமான சொற்பொழிவுகள் நிகழ்த்துவதிலும் தன்னிகரற்று விளங்கி வருகின்றனர். திருமண், பூணூல் தரித்துத் தீவிர வைணவராகவும் ஒழுகி வருகின்றனர். இத்தகைய வைணவச் செம்மல்களைப் பிறப்பு நோக்காது சிறப்புச் செய்வதன் மூலம் வைணவத்தை மேலும் வளம் பெறச் செய்தல் இயலும்.

**வேறுபாடு நீக்கல் :**

திருமாலையே பரம்பொருளாகக் கொண்டு வழிபாடு செய்வோர் வடகலை, தென்கலை என்று பேதம் பாராட்டிப் பெரும்போரே செய்து வருகின்றனர். இத்தகையோரால் வைணவம் வளர்ச்சியுறுமா? தளர்ச்சியன்றோ அடையும்! இந்நிலையினை இரு திறத்தாரும் ஆராய்ந்து பார்க்க வேண்டாவா! சின்னத்தைக் காட்டி வைணவத்தைப் பின்னப்படுத்தலாமா? ஆகம நெறி முக்கியமா? ஆண்டவனை அடைய அருள் நெறி காட்டும் வைணவ நெறி முக்கியமா? இவற்றை ஆராய்ந்து பார்த்து வைணவர்கள் அறிவு பூர்வமாகச் செயல்பட வேண்டாமா? இவற்றுக்கெல்லாம் வழிகாட்ட வேண்டியவர்கள் யார்? தென் மண்டலத்தில் எழுந்தருளியிருக்கும் மடாதிபதிகளன்றோ! எனவே வடகலை, தென்கலை மடாதிபதிகள் ஒன்று சேர்ந்து செல்லுமிடமெல்லாம் வைணவம் என்ற ஒரு குரலை மட்டுமன்றோ எழுப்ப வேண்டும்! தங்கள் சமயப் புலமையாலும் தொண்டுள்ளத்தாலும் மக்கள் மனத்தைக் கவர வேண்டாவா?

**சரியான அமைப்பு தேவை :**

தென்னிந்தியாவில் காணப்படும் வடகலை, தென்கலை மடங்களை மண்டலங்களாகப் பிரிக்க வேண்டும். அந்தந்த மண்டலத்துக்குரிய மடாதிபதிகள்—ஜீயர் சுவாமிகள் வைணவ சமய வளர்ச்சிக்குரிய வழிகளை வகுக்க வேண்டும். அந்தந்த மண்டலத்துக்குரிய ஜீயர் சுவாமிகள் பாகவதர்களோடும், சொற்பொழிவாளர்களோடும் தொடர்பு கொள்ள வேண்டும். அவர்கள் தொண்டினைப் பயன்படுத்திக் கொள்வதன்மூலம் வைணவ சமயத்தை வளர்ப்பதற்கான அமைப்புகளையும் திட்டங்களையும் வகுத்து உண்மையுடன் செயல்பட வேண்டும். எனவே, இதற்கான சபா போன்ற அமைப்புகளை நாடெங்கிலும்தோற்றுவித்துத் திறமையுடன் செயல்படுத்த வேண்டும்.

**எழுந்தருள்க :**

வைணவ மடாதிபதிகள் மடத்துக்குள்ளேயே அமர்ந்து, வழிபாடு செய்து, மடத்தைக் காத்து நின்று, தம்மை நாடி வருவார்க்கு அருளுபதேசம் செய்வதால் மட்டுமே வைணவம் வளர்ந்து விடாது. மடத்திலிருந்தும் புறப்பட்டு வெளியே எழுந்தருள வேண்டும். பட்டி தொட்டிகளிலும் வாழும் மக்களைச் சந்திக்க வேண்டும். மனந்திறந்து பழகி அருள்

புரிய வேண்டும். வைணவ தரிசனத்தை வையகமெல்லாம் பரப்பிய இராமாநுசரைப் பின்பற்றி நடக்க வேண்டும். தங்களுடன் வடமொழி, தென்மொழி வல்லுநர்களான சொற்பொழிவாளர்களை அழைத்துச் செல்லுதல் வேண்டும். ஆங்காங்கே அருளுரைகள் நிகழ்த்த ஏற்பாடுகள் செய்தல் வேண்டும். பாத யாத்திரையாகச் சென்று ஆன்மீக போதனைகளை நிகழ்த்துதல் வேண்டும். தலைமையைக் கருதாது தன்னலம் பாராது. தக்கோர் பாராட்டும் வகையில் தொண்டு செய்து உண்மையான வைணவ மடாதிபதிகளாக நடந்து கொள்ளுதல் வேண்டும்.

**தற்சார்பு :**

தற்காலத்தில் கோயில்கள் அறநிலையத்துறையினரால் எடுத்துக் கொள்ளப்பட்டு நிர்வாகம் செய்யப்படுகிறது. இம்முறையால் சமயப் பெரியோர்களின் ஆளுமைத் திறன் கோயில்களுக்குப் பயன்படாமலேயே போய்விடுகிறது. எனவே, அறநிலையத்துறையினரின் ஆளுகையிலிருந்து கோயில்களையும், கோயில் நிலங்களையும் மீட்டு ஜீயர்கள், வைணவச் சான்றோர்களின் ஆளுகையின் கீழ்க் கொண்டு வருதல் வேண்டும். நிலச் சட்டங்களை மாற்றி, கோயில் நிலங்களின் உண்மையான வருமானம் கோயில்களுக்கும், சமய வளர்ச்சிக்கும் பயன்படுமாறு செய்வதற்கான முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். மடாதிபதிகளும் வைணவப் பெரியோர்களும் இதற்கான திட்டங்களை வகுத்து அரசினை அணுகித் தீவிரமாகச் செயல்பட வேண்டும். கோயில்கள் தற்சார்புடையனவாகத் திகழ்ந்தாலன்றிச் சமயம் வளர்ச்சி ஏற்றம் பெறுது என்பதை உணர்தல் வேண்டும்.

**பாடசாலைகள் :**

ஒவ்வொரு மண்டலத்திலும் எழுந்தருளியிருக்கும் வடகலை, தென்கலை ஜீயர் சுவாமிகள் ஒன்று சேர்தல் வேண்டும். ஆங்காங்கே வேத பாடசாலைகள் போன்றதொரு அமைப்பை ஏற்படுத்த வேண்டும். சமயப் பாடசாலைகளில் வடமொழி, தென்மொழிப் பாடல்களையும் உரை நூல்களையும், சமயப் பெரியோர்களின் வரலாறுகளையும் சொல்லித் தருதல் வேண்டும். திவ்யப் பிரபந்தங்கள், ஸ்ரீபாஷ்யம் முதலானவற்றைப் பயிற்றுவிக்க வேண்டும். வைணவ சமயக் கருத்துக்களைப் பரப்புவதற்காக மட்டுமே இப்பாடசாலைகள் பயன்படுதல் வேண்டும். இவை போன்ற போதனை சாலைகளினுல் வைணவத்தை மேலும் வளம் பெறச் செய்ய முடியும்.

**வேண்டுகோள் :**

இதுகாறும் சில சிந்தனைகளை மட்டுமே உங்களோடு பகிர்ந்து கொள்ள முடிந்தது. இவை முடிந்த முடிவுகளல்ல. இவற்றுள் கொள்ளத்தக்கனவும் இருக்கலாம்; தள்ளத்தக்கனவும் இருக்கலாம். மேலும் உயரிய சிந்தனைகள் உங்கள் உள்ளங்களில் தோன்றக்கூடும். எவ்வாறேனும் உயர் சமயமாகிய வைணவ சமயத்தைப் பிற சமயத்தாக்கங்களிலிருந்தும் காப்பாற்றி, முந்தைய காலத்திலிருந்த மேன்மை நிலைக்கு வைணவ சமயத்தைக் கொண்டு வந்து நிறுத்தி மேலும் வளர்ச்சி பெற வைணவச் சான்றோர்கள் வழிகாட்ட வேண்டுமென்று வேங்கடவன் திருவடிகளை வணங்கிக் கேட்டுக் கொள்கிறேன். வைணவ சமய வளர்ச்சிக்கு உதவும் சான்றோர்களின் திருவடிகள் என்றும் என்முடி மீதிருக்கும்.

இன்றைய நிலையில் வைணவ சமயத்தின் வழிகாட்டியாகவும், விழிப்புணர்ச்சி ஏற்படுத்தும் வித்தகராகவும், ஸ்ரீவைணவத் திலகமாகவும் விளங்கும் ஸ்ரீபெரும்புதூர் யதிராஜ ஜீயர் சுவாமிகளின் திருப்பணியினை நெஞ்சிற்கொண்டு அஞ்சலிக்கிறேன்.



## திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# நன்கொடைத் திட்டத்தின் கீழ் குடில்கள்

திருமலையில் யாத்திரிகர்களின் நலனுக்காக நன்கொடைத் தொகைகளின் மூலம் பல தங்குவசதிகளான குடில்கள், அறைத்தொகுதிகள், சத்திரங்கள், விருந்தினர் விடுதிகள் போன்றவற்றைக் கட்டுவதற்குப் பொது மக்களிடமிருந்து தேவஸ்தான மேலாண்மை நன்கொடைகள் பல பெற்று வருகின்றது. இத்திட்டத்தின் விவரங்கள் பின் வருமாறு:

## கருடாத்ரி நகர் குடில்கள் திட்டம

இத்திட்டத்தின்கீழ் ஒவ்வொன்றும் 4 அறைத் தொகுதிகளைக் கொண்டு விளங்கும்படியான 18 குடில்கள் கட்டிடத்தின் அடித்தளத்திலும், முதல் தளத்திலும் கட்டப்படும்.

* பொதுத் தாழ்வாரம் மற்றும் குளியலறை இணைப்பு வசதியுடன் கூடிய 10×12 அடி பரப்பளவு கொண்ட அறையும் உள்ளதாக ஒவ்வொரு அறைத்தொகுதியும் விளங்கும்.

* ரூ. 30,000 வழங்கும் நன்கொடையாளரின் பெயரில் 320 சதுர அடி கட்டிட பரப்பளவு கொண்டதாக இவ்அறைத்தொகுதி விளங்கும். நன்கொடையாளர் விரும்பி, 8 அறைத் தொகுதிகளைக் கொண்ட ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 2. 4 இலட்சமும், 4 அறைத் தொகுதிகளைக் கொண்ட ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 1.2 இலட்சமும், 2 அறைத் தொகுதிகளைக் கொண்ட ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 60,000-ம் வழங்கினால், அவை கட்டித் தரப்படும்.

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதி திட்டம்

கோயிலுக்கு வடகிழக்குப் பக்கத்தில் இந்த விருந்தினர் விடுதி கட்டப்படும். இவ்விடுதி மூன்று தளங்களையும், ஒவ்வொரு தளமும் 50 அறைத் தொகுதிகளையும், ஒவ்வொரு அறைத்தொகுதியும் 600 சதுர அடி கட்டிடப் பரப்பளவில் விளங்கும்படியாக 14×18அடி என்ற பரப்பளவில் உள்ள அறைகளையும் கொண்டு விளங்கும். மேலும் ஒரு பொதுத் தாழ்வாரமும் கொண்டு விளங்கும்.

* ஒவ்வொரு அறைத்தொகுதிக்கும் நன்கொடையாளர் ரூ. 60,000 வழங்கவேண்டும்.

## ஸப்தகிரி தர்மசாலை

ரூ. 8.5 கோடி செலவில் "ஸப்தகிரி சத்திரங்கள்" எனும் பெயரில் இம்மாபெரும் திட்டம் மேற்கொள்ளப்படும். ஒவ்வொரு அறைத்தொகுதியும் ரூ. 80,000/- செலவில் கட்டப்படும்.

ஆகும் செலவில் ரூ. 40,000/- நன்கொடையாளர் வழங்கினால், அவ்வறைத்தொகுதி அவருடைய பெயரில் அமையும்.

## பலனகள

நன்கொடையாளர்கள் வருடத்தில் 60 நாட்களுக்கு இலவசமாக அவருடைய நன்கொடை அறைத் தொகுதியில் அல்லது குடிலில் தங்கலாம். ஆனால் இந்தச்சலுகை நிறுவனங்களுக்கும், வாணிகக் கழகங்களுக்கும் 15 வருடங்களுக்கு மட்டுமே அளிக்கப்படும்.

இத் தங்குவசதி ஒதுக்கீடுகளின் போது நன்கொடையாளர்களின் உற்றார் உறவினர்களுக்கு முன்னுரிமை வழங்கப்படும்.

ஒவ்வொரு அறைத்தொகுதி அல்லது குடிலிலும் சம்பந்தப்பட்ட நன்கொடையாளர்களின் பெயர்ப் பலகைகள் நிரந்தரமாகப் பொருத்தப்படும்.

மேற்படி திட்டங்களில் பங்கேற்க விரும்பும் நன்கொடையாளர்கள் அதற்கான தொகையினைச் "**செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.**" எனும் பெயரில் காசோலை மூலமாகப் பெற்று, தேவையான தகவல்களுடன் கூடிய கடிதத்துடன் இணைத்து அவற்றை, "**தலைமை கணக்கு அலுவலர் தி. தி. தேவஸ்தானம் திருப்பதி**" எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும்.

மேலும் விவரங்களுக்கு "செயலாட்சித்தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

**செயலாட்சித் தலைவர்.**

**" தரும் பொருள் சிறிதே; பெறும் அருள் பெரிதே "**

# வால்மீகி திருவுள்ள விளக்கு

## ஸ்ரீ காஞ்சீ காதி அனந்தாசார்யஸவாமி அருளிய வால்மீகி பாவு தீபத்தின மொழிபெயர்ப்பு

பகவான் நாரங்களின் முயற்சிக்குக் காரணமாயிருக்கிருனென்பது, 'ஜனங்களின் உட்புகுந்து அவர்களை நியமிக்கிருன்-முயலச் செய்கிருன் எல்லோர்க்கும் ஆத்மாவான பகவான்' (தை. ஆரண் 3-11) என்றிது முதலிய ச்ருதிகளால் அறியப்பட்டது.

'எந்த அழிவற்ற ஸர்வேச்வரன் லோகத்ரயத்தையும் அதாவது அசித்து ஸம்ஸாரிஜீவன் முத்தி பெற்ற ஜீவன் இம்மூன்றையும் உட்புகுந்து தாங்குகிருனே' (கீதை 15-17) என்றும், 'அர்ஜுநனே எல்லா ப்ராணிகளுடையவும் ஹ்ருதய ப்ரதேசத்தில் ஸர்வ நியாமகனுகிய பகவான்-சரீரமாகிய யந்த்ரத்தில் ஏறிய எல்லா ப்ராணிகளையும் ஸத்வாதி குண மயமான மாயையினுல் சுழற்றிக்கொண்டு (=அவரவர்களுக்கு முன்னேய பழக்கத்தினுலுண்டான ஆசையை அனுஸரித்து ஸத்வாதி குணமயமான எண்ணங்களை உண்டாக்கி அதற்குத் தக்கவாறு முயற்சிகளேயும் உண்டு பண்ணிக்கொண்டு) இருக்கிருன்' (கீதை 18-61) என்றும் உள்ள இவை தொடக்கமான ஸ்ம்ருதிகளாலும் இவ்விஷயம்-அதாவது பகவானுடைய தரிக்குந்தன்மையும் உட்புகுந்து தூண்டுந்தன்மையும் விளக்கம் பெறுகின்றது.

ஆக நாரங்களின் ஸ்வரூபம் தரித்து நிற்பதற்கும் முயற்சிக்கும் காரணமாயிருத்தலென்ற ஆதாரத்வமானது ப்ரஹ்மத்தின் தனிப்பட்டதொரு தன்மையென்பது உறுதி பெற்றதாயிற்று.

உபாயமாகையும் ப்ரஹ்மத்தின் தனிப்பட்ட தன்மையேயாகும். (உபாயமாகையாவது மோக்ஷத்திற்குத் தானே வழியாக-கருவியாக நிற்றல்) ச்வேதாச்வதரோபநிஷத்து ஆருமத்தியாயத்தில் 'எவன் முதன் முதலில் நான்முகக் கடவுளைப் பிறப்பித்தானே, எவன் அந்நான்முகனுக்கு வேதத்தை உபதேசித்தானே, தன்னைப் பற்றிய தெளிந்த அல்லது விளக்கமான அறிவையுண்டாக்குகிற அத்தேவனே, மோக்ஷமடைய விரும்பிய நான் சரணமாக-மோக்ஷத்திற்கு உபாயமாகப் பற்றுகிறேன் (18)' '(தனது உபயோகத்திற்காக) தேக வுறுப்புக்களில்லாதவனும் செய்ய வேண்டிய வேலையில்லாதவனும் பசி தாகம் மூப்பு மரணம் துக்கம் மோஹம் இவையில்லாதவனும் எதிலும் ஆசையில்லாதவனும் விறகு முழுவதையும் எரிக்கும் அக்நி போல் தன்னைத் தானே விளங்கச் செய்பவனும் மோக்ஷத்திற்கு ஸேது போல்-அணை போல்-உபாயமாக-வழியாகவுள்ளவனுமாகிய தேவனை அறியாமற் போனுல் துக்க நாச ரூபமான மோக்ஷம் உண்டாகாது (19)' என்ற பதினெட்டு பத்தொன்பதாம் மந்திரங்களில் 'சரணம்' 'ஸேது' என்ற சொற்களால் மோக்ஷத்திற்கு உபாயமாகுந்தன்மை கூறப்பட்டுள்ளமையாலும், 'எல்லோரையும் நியமிக்கும் பகவானையே எல்லாவிதத்திலும் உபாயமாக அடைவாய்' (கீதை 18-62) 'எல்லாத் தருமங்களையும் விட்டு (=உபாயமாக நினையாமல்) என்னொருவனையே உபாயமாகப் பற்றக்கடவாய்' (கீதை 18-66) என்றிவை முதலியவிடங்களில் ப்ரஹ்மத்திற்கு-மோக்ஷத்திற்கு உபாயமாந்தன்மை சொல்லப்பட்டுள்ளதனுலும் இவ்விஷயம் அறியலாகிறது.

ப்ரஹ்மத்திற்கு உபேயத்வமும் (முக்தி நிலையில் ஜீவாத்மாவால் அடையப்பட்டு அனுபவிக்கப்படுந்தன்மையும்) 'ப்ரஹ்மத்தை உபாஸிப்பவன் ப்ரஹ்மத்தை அடைந்து அனுபவிக்கிருன் (தை. ஆன-1) என்றிது முதலான ச்ருதிகளிலும் ஸ்ம்ருதிகளிலும் பிரசித்தமாயுள்ளது.

இத்தகைய - பரப்ரஹ்மத்திற்கே உரியதாய், ஸகல லோகத்துக்கும் ஆதாரமாயிருத்தல் மோக்ஷோபாயமாயிருத்தல் மோக்ஷ நிலையில் அடையப்படுமதாயிருத்தலென்னும் நாராயணத்வமானது, இவ்விராமாயணம் பாலகாண்டம் பதினுருவது ஸர்க்கத்தில் 'பின்பு நாராயணனென்னும் தேவர் பெருமான் தேவர் தலைவரான பிரமன் சிவன் இந்திரன் முதலியோரால் வேண்டப்பட்டவராய், மேல் செய்ய வேண்டிய காரியத்தைத் தாம் அறிந்திருந்த போதிலும் தேவர்களைக் குறித்து, தாம் என்ன செய்ய வேண்டுமென்பதைப் பற்றி இனிய வார்த்தையைப் பேசினர்' (1) என்ற ச்லோகத்தில் விஷ்ணுவைக் குறிப்பதாக ப்ரயோகிக்கப்பட்ட நாராயண சப்தம் ஒன்றினுலேயே சுருக்கமாகச் சொல்லப்பட்டு, அப்பிரானுக்குப் பரப்ரஹ்மத்வத்தை அறிவிக்கின்றது; நாராயண சப்தத்திற்கு முற்கூறியபடியே 'நாராணும் அயநம் - நாராயண:'

*தமிழாக்கம்:*

திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்.

*சிரோமணி வித்வான்*

*திருப்பதி*

ஆறும் வேற்றுமைத் தொகை கொள்ளுதலால் ஸகல ஜகத்துக்கும் ஆதாரத்வம் உபாயத்வம் உபேயத்வம் ஆகியவை எல்லாம் கிடைப்பதனுல் என்க.

இங்கு நாராயண சப்தத்திற்கு ஷஷ்டீதத்புருஷஸமாஸங்கொள்வதற்கு-'நாரங்களுக்கு அயனமாயிருப்பதனுல் நாராயணனென்று கருதப்பட்டான்' (ப்ரஹ்மகைவர்த்தம்), 'நாரமென்றதனுல் ஸமஸ்த ஜீவாத்மஸமூஹம் சொல்லப்பட்டது. அதற்கு மோக்ஷோபாயமாகவும் அடையப்படும் பொருளாகவும் இருக்கிருன் பகவான். அதனுல் அவன் நாராயணனென்று கருதப்பட்டான்' (பாத்மோத்தரம்), 'நாரமாவது நரர்களான ஜீவாத்மாக்களின் திரள். அதற்கு நான் அயனமாக-உபாயமாக இருக்கிறேன். அது கொண்டு ரிஷிகளால் நான் நாராயணனென்று எப்போதும் கூறப்பட்டுள்ளேன்'(?) என்ற ப்ரஹ்மகைவர்த்தாதி வசனங்கள் கைகொடுத்து உதவுகின்றன. அயன சப்தத்திற்கு ஆதாரமென்பது மட்டுமே அர்த்தமாக இருந்த போதிலும், 'பிராணிகள் மரணமடைபவைகளாய்க் கொண்டு எதுதன்னில் ஒன்றுபட்டுப் புகுகின்றனவோ-லயமடைகின்றனவோ அது ப்ரஹ்மமென்று அறியக் கடவாய்' (தை-ப்ருகு-1) என்றிது முதலிய ச்ருதிகளிலும் ஸ்ம்ருதிகளிலும் கூறப்பட்டபடியே ப்ரஹ்மமே ஸகல லோகங்களின் லயத்திற்கு இடமாகவுள்ளது பற்றி ஸகலலோகாதாரமாகையால் நாராயணத்வமென்பது ப்ரஹ்மத்திற்கேயுள்ள தனிப்பட்ட தருமமாகையாலும், அது இவ்விடத்தில் விஷ்ணுவினிடமுள்ளதாகச் சொல்லப்படுவதனுலும் நாராயணத்வமென்னும் காரணம் விஷ்ணுவுக்குப் பரப்ரஹ்மத்வத்தைச் சாதிக்குமென்பது அறியத்தக்கது.

திற்கு 'நாரா: அயநம் யஸ்ய ஸ: நாராயண: (நாரங்கள் எவனுக்கு அயனமோ-இடமோ-சரீரமோ அவன் நாராயணன்) என்ற பஹுவ்ரீஹி ஸமாஸமும் பல வசன ஸமூஹங்களை அத்தாட்சியாகக் கொண்டுள்ளது. இந்த அன்மொழித்தொகையின்படி நாராயணத்வமாவது சேதநாசேதந ரூபமான ஸகல ஜகத்திலுமுள்ளமையாகும். இறுதியில் அது, ஸகல ஜகத்தையும் சரீரமாகக் கொண்டுள்ளமை என்ருவது, ஸகல ஜகத்துக்கும் அந்தர்யாமியாயுள்ளமை என்ருவது கூறப்பட்டதாக முடிவு பெறும். அத்தன்மையோவெனில் "ஸர்வாந்தர்யாமிபாவாத்" என்ற பன்னிரண்டாவது காரணம் நிரூபிக்கப்பட்டவிடத்தில் காட்டப்பட்ட அந்தர்யாமி ப்ராஹ்மணுதி வசனங்களினுல் ப்ரஹ்மத்திற்கே தனிப்பட்ட தருமமாக அறியப்பட்டதேயாகும்.

இவ்விஷயம் 'இவ்வுலகில் எந்த ஒரு பொருள் காணப்படுகிறதோ அல்லது கேட்கப்படுகிறதோ, அவை யனைத்தையும் நாராயணன் உள்ளும் புறமும் வியாபித்து நிற்கிருன்' (தைத்-நாரா-94) என்ற ச்ருதியாலும், 'எல்லாப் பொருள்களும் நரனை-அழிவில்லாத பரமாத்மாவினிடமிருந்து உண்டாயின. அதனுல் அவற்றை நாரங்களென்று நினைக்கின்றனர் பெரியோர். அப்பொருள்களே நரனை பரமாத்மாவுக்கு இருப்பிட(சரீர)மாகின்றன. அதனுல் அவன் நாராயணனென்று கருதப்பட்டான்' என்ற மகாபாரத-உத்யோக பர்வ வசனத்தாலும், 'ஜலமே நாரமென்று கூறப்பட்டது. ஏனெனில் அது பரமாத்மாவான நரனிடமிருந்து உண்டான பிள்ளையன்ருே? அப்படிப்பட்ட ஜலம் இப்பரமாத்மாவுக்கு முதன் முதலில் இடமாக இருந்தபடியினுல் இவன் நாராயணனென்று கருதப்பட்டான்' (மநுஸ்ம்ருதி 1-10) என்ற மனு வசனத்தாலும் ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டது.

தனிப்பட்ட தன்மையான நாராயணத்வம் இங்கு விஷ்ணுவினிடம் கூறப்பட்டபடியால் விஷ்ணுவே பரப்ரஹ்மமென்று நிலைநாட்டப்பட்டதாயிற்று.

அல்லது 'நாராயணத்வாத்' என்பதற்கு நாராயண பதத்தினுல் குறிக்கப்பட்டபடியினுல் என்று பொருள். நாராயண சப்தம்-'நாராயணன் ஒருவனே யன்ருே (ஸ்ருஷ்டிக்கு முன்பு) இருந்தான்' (மஹோபநிஷத் 1-1.) என்றிது முதலான ச்ருதி ஸம்ருதிகளில் பரப்ரஹ்மத்தினிடம் இலக்கணையினுலன்றி முக்கியமாகவே ப்ரயோகிக்கப்பட்டதாகக் காண்கிறது. அதே சொல்தான் இங்கு விஷ்ணுவினிடம் வால்மீகி மஹர்ஷியால் ப்ரயோகிக்கப்பட்டது. அது விஷ்ணு பரப்ரஹ்மமாயிருந்தாலன்றிப் பொருந்தமாட்டாது. இதிலிருந்து, நாராயண பதத்தினுல் குறிக்கப்படுந் தன்மையென்பது விஷ்ணுவுக்குப் பரத்வத்தைச் சாதித்துத் தரவல்லதென்று நிச்சயிக்கப்பட்டதாயிற்று. ஆக 'நாராயணத்வாத்' என்ற காரணம் மிகவும் பொருந்தியதேயென்பது ஸ்திரமாயிற்று.

இனிப் பதினுன்கு பதினைந்து பதினுறும் காரணங்கள் கூறப்படுகின்றன-தேவேசத்வ, அவ்யயத்வ, த்ருஹிண ஹர சுநாஸீர முக்யாமரௌக ப்ரத்க்ஷாந்தர்த்திபி: ச' என்பதனுல். தேவேசத்வமாவது ஸகல தேவதைகளுக்கும் தலைவனுயிருத்தல்; அவ்யயத்வமாவது வ்யயமில்லாமையாய் அழிவில்லாமலிருத்தலைச் சொன்னதாக முடியும்; த்ருஹிணனுவான் பிரமதேவன், ஹரனுவான் சிவபெருவான், சுநாஸீரனென்பான் இந்திரன், இவர்களை முக்கியர்களாகக் கொண்ட தேவர்களின் கூட்டத்திற்கு எப்போது ப்ரத்யக்ஷம் உண்டாகிறதோ அப்பொழுதே-அதாவது தேவர்கணம் பார்த்துக்கொண்டிருக்கும் போதே, அந்தர்த்தியாவது - மறைதல். ஆக எல்லாத் தேவர்களுக்கும் சக்ரவர்த்தியாயிருத்தலென்ன, அழிவில்லாம

கண்டு கொண்டிருக்கும் ஸமயத்திலேயே மறைந்துவிடுதலென்ன ஆகிய இம்மூன்று காரணங்களாலே என்பது பொருள்.

இத்தொகைச் சொல்லால் கருதப்பட்ட தேவேசத்வம் முதலான மூன்றிலும் ஒவ்வொன்றே விஷ்ணுவிற்கு ஸர்வோத்தமத்வத்தை நிலை நாட்டத்தக்க காரணமாக வல்லது. முதலிரண்டோடு கூடிய மூன்றாவது-காரணம் என்றாவது, முதலும் மூன்றுமாகிய இரண்டோடு கூடிய இரண்டாவது-காரணம் என்றாவது, இரண்டும் மூன்றுமாகிய இரண்டோடு கூடிய முதலாவது-காரணம் என்றாவது கொண்டு மூன்றும் சேர்ந்தே ஸர்வோத்தமத்வத்தை நிலைநாட்டுகிற கூறப்பட்ட மூன்று வகையான ஸமுதாயங்களில் இறுதியில் உள்ள விசேஷ்யம் ஒவ்வொன்றே விஷ்ணுவுக்கு ஸர்வோத்தமத்தைச் சாதிக்கப்போதுமாயிருக்க, அதற்கு விசேஷணங்களான மற்ற இரண்டும் பயனற்றவையாய் விடுமல்லவா?

அவற்றுள் தேவதைகளுக்கு ஸார்வபௌமனாயிருத்தலென்னும் தேவேசத்வம் (14வது காரணம்) விஷ்ணுவுக்கு ஸர்வோத்தமத்வத்தைச் சாதிக்க வல்லதென்பதில் விவாதமே (கருத்து வேற்றுமையாலுண்டான பிணக்கே) இல்லை; தேவர் மனிதர் விலங்கு பறவை முதலிய பிராணிகளில் தேவர்களுக்கே மிகவுயர்த்தியுள்ளமையால், லென்பது எல்லா ப்ராணிஸமூஹத்துக்கும் உத்தமனாயிருத்தலென்ற தருமத்தை விட்டுப் பிரியாதிருக்குமாகையால் என்க. (ஐந்தாவது என் நான்காமதான எண்ணை விட உயர்ந்ததென்று கூறினால், அது ஒன்றிரண்டு மூன்று நான்கென்னும் எல்லாவற்றை விட உயர்ந்ததென்பதைத் தனிப்படச் சொல்ல வேண்டுவதில்லை என்னுமாப்போல, தேவர்களைவிட விஷ்ணு உயர்ந்தவரென்றால் பறவை விலங்கு மனிதர் தேவர் என்ற எல்லாரையும் விட விஷ்ணுவுக்கு உயர்த்தியைத் தனிப்படச் சொல்ல வேண்டிய அவசியமில்லாமல் தானே ஸித்திக்குமென்று கருத்து.)

---

எவ்விதத்திலும் அழிவில்லாமை யென்கிற அவ்யயத்வம் (15வது காரணம்) அழிவையுடைய சேதநாசேதநங்கள் எல்லாவற்றையும்விட உத்தமத்வத்தைச் சாதிக்கின்றது. சேதநர்களான ஜீவாத்மாக்களுக்கும் அசேதனமான ப்ரக்ருதிக்கும் ஸித்தாந்தத்தில் அழிவின்மை ஒப்புக்கொள்ளப்பட்டிருந்த போதிலும் அவற்றுக்கும் ஒரு வகையில் அழிவுண்மை இசையப்புட்டதொன்றேயாகும்; ஜீவாத்மாக்களுக்கு சரீரத்தை விடுதல் முதலான அழிவும் ப்ரக்ருதிக்கு வெவ்வேறு நிலையை அடைதலென்ற அழிவும் அனைவர்க்கும் உடன்பாடேயாகையால் என்க. முன்னைய தனது நிலைமையோடு கூடிய ஒரு பொருளுக்குப் பின்னைய வேறு நிலைமை வருதலாகிய அழிவும், ஒரு பொருளுக்கு முன்னைய வேறு நிலைமை கழிந்து தனது நிலைமை வருதலாகிய உத்பத்தியுமாகிய பிறப்பழிவுகள் வைஷ்ணவ ஸித்தாந்தத்தில் ஒப்புக்கொள்ளப்பட்டனவாகையால் முற்கூறிய அத்தகைய அழிவானது சேதனங்களுக்கும் அசேதநங்களுக்கும் ஸமானமானதேயாம். (சரீரத்தோடு கூடியிருக்கும் ஆத்மாவுக்கு அச்சரீரம் விடுபடுதலாகிய பின்னைய நிலைமை வருதல் அழிவு; அதற்குச் சரீரமில்லாமலிருந்தலென்னும் முன்னைய நிலைமை கழிந்து சரீரத்தோடு கூடியிருந்தலென்னும் தனது நிலையைப் பெறுதல் பிறப்பு என்றும், துணியாக இருக்கும் ஒரு பொருளுக்குக் கிழிதலாகிய பின்னைய நிலைமை வருதல் அழிவு; அத்துணிக்கு நூலாக இருந்த முன்னைய நிலைமை கழிந்து துணியாக இருக்கும் தனது நிலையைப் பெறுதல் பிறப்பு என்றும், முற்கூறிய பிறப்பழிவுகளின் லக்ஷணங்களை உதாரணங்களோடு பொருத்திக் காண்க.)

அல்லது-அவ்யயத்வமாவது மாறுதலில்லாமை. அது ஸ்வரூபத்தினுலும் குணத்தினுலும் மாறுதலில்லாமையென்று கருதப்பட்டது. ஆத்மாக்களுக்குச் சுருங்குவதும் மலர்வதுமாகிய அறிவின் வாயிலாக மாறுபடுந்தன்மையும், ப்ரக்ருதிக்கு-ஜடப்பொருளுக்குத் தன் ஸ்வரூபத்தாலே நேராகாவே மாறுபடுந்தன்மையும் அனைவருமிசைந்ததேயாகும். அத்தகைய இருவகைப்பட்ட மாறுதலுமில்லாமையாகிய அவ்யயத்வம் தானுள்ள இடமான விஷ்ணுவுக்கு ஸகலபதார்த்தங்களைக் காட்டிலும் உத்தமத்வத்தைச் சாதிக்கிறது. அவ்யய சப்தம் மாறுதலில்லாததென்னும் பொருளைக் குறிப்பதாக-சங்கரர் பணித்த ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் 'பூதாத்மா பரமாத்மா ச' என்ற இரண்டாவது ச்லோக வ்யாக்யானத்தில் (அவ்யய: என்னும் பதின்மூன்றும் திருநாமத்துக்கு) 'இவ்விஷ்ணுவுக்கு அழிவோ விகாரமோ (=மாறுதலோ) இல்லையென்பதனுல் இவன் அவ்யயனுகிறுன்' என்று வியாக்யானம் செய்யப்பட்டுள்ளது.



திருவாவினன்குடி சந்நதி கோபுரம் — பிரகாரம் (திரு பழனி மலை அடிவாரம்.)
மலை மேல் திரு பழனி ஆண்டவர் ஆலயம்.
திரு. எஸ். ஜி. சேஷகிரி — கோயம்புத்தூர்.

இந்த்ராதி தேவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே மறைந்து போதலென்பது (16வது காரணம்) அவர்களைவிட விஷ்ணு உயர்ந்தவ ரென்பதனைச் சாதித்தே தீரும். எவன் பார்த்துக் கொண்டிருக்கும் போது எவன் மறைகிறுனே, பார்த்துக் கொண்டிருக்கும் அவனைவிட மறைகின்ற அவன் அதிக சக்தி படைத்தவனென்பது அனைவரும் உடன்படுமதேயன்றே? ஆகையால் இந்திரன் உருத்திரன் நான்முகன் முதலியோர் கண்டு கொண்டிருக்கும் போதே மறைந்து போதலென்பது விஷ்ணுவுக்கு அவர்களைவிட மேன்மையை அறிவிக்கின்றது.

(தொடரும்)

# பாவை நோன்பு

ஸ்ரீ ஹரி — சென்னை.

அறிவினுக் கறிவாம் அரியே போற்றி
ஆண்டாள் மாலையை அணிந்தாய் போற்றி
மஞ்சின் வண்ண மாலே போற்றி
அஞ்சலென் றடியார்க் கருள்வாய் போற்றி ''

வாழ்க்கை ஸாகரத்திலே உறங்குகிறவர்களை எழுப்பி எம்பெருமான் தானே தன் தரிசனத்தைக் காண்பிக்க, கண்ணுற்றுர்கள் ஆழ்வார்கள். ஆனுல் கோதையோ தானே வலிய வந்து எம்பெருமானை எழுப்பினுள்; தன் இதயத்தில் எழுந்த வேண்டுகோளை விண்ணப்பித்தாள். கார்மேக வண்ணனின் கமலக் கண்கள் மலர்ந்தன. ஆண்டவனையே தன் பக்தியால் ஆண்டதால்-ஆட்கொண்டதால் 'ஆண்டாள்' ஆனுள். ஆகவே ''அவர்களிலும் இவள் விலக்ஷணை'' என்பர் ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை.

**பாவை நோன்பு :**

பெரியாழ்வார், கண்டெடுத்துச் சீராட்டிப் பாராட்டி கோதை என்று திருநாமஞ்சூட்டி-வளர்ந்தவளே ஸ்ரீ ஆண்டாள். 'நோன்பு என்று ஒரு வியாஜத்தாலே' எம்பெருமானுக்கு ஆட் செய்வதே பரம புருஷார்த்தம் என்பதைத் திருப்பாவைக்குக் கருத்தாக அருளிச் செய்பவர் பெரியவாச்சான் பிள்ளை. இந்த நோன்பே-'பாவை நோன்பு' என்றும், ''மார்கழி நோன்பு'' என்றும் கூறுவர்.

'மழை' நன்கு பெய்து, உலகில் நீர் வளமும், நிலவளமும், பால் 'வளமும், தான்ய வளமும், நன்கு வளர்ந்து திகழவும்; நல்ல பண்புகளால் உருவான ஆண்மை மிக்கவர்களையே கணவர்களாக அடைய வேண்டும் என்றும்—கன்னிப் பெண்கள்—இந்த இரு முக்கிய காரணங்களுக்காகவே மனம் மொழி செயலால் இறைவனை தியானித்து வேண்டுகின்றனர். இஃதே 'பாவை நோன்பு' என்பர்.

ஏன் திருமாலிடம் விண்ணப்பஞ் செய்து நோன்பு நோற்க வேண்டும்?

ஒருருவாகி நாமம் பலவாகி நின்று கடை விழிப்பார்வையிலேயே தனம், தான்யம், சந்தானம், வித்தை, வீரம், வீர்யம், ஜயம், விஜயம் ஆகிய அஷ்ட ஐஸ்வரியங்களையும் அள்ளித் தரும் அஷ்ட லக்ஷ்மிகளையும் தன் மார்பிலேயே மலர வைத்துள்ளார் கமலச் செங்கண்ணன். தம்மை தியானிப்போருக்கு அஷ்ட ஐஸ்வரியங்களையும் அதோடு மட்டுமல்லாமல் தன் அருளையும் சேர்த்து வழங்குவார் என்று கூறவும் வேண்டுமோ?

உயர்ந்த பண்புகள் அற்ற கணவன்மார்கள் கிடைத்துவிட்டால்-வாழ்க்கையே நரகவேதனைதான். துன்பம் - துக்கம்-துயரம்-தொல்லை-கண்ணீர்-கவலை-வேதனைதான் காலம் முழுவதும். துன்ப மய்மான வாழ்க்கை ஏற்படா வண்ணம் அமைய இறைவன் திருவருள் தேவை. அதை நாடியே கன்னிப் பெண்கள் நோன்பு நோற்கின்றனர்.

**திருப்பாவையின் உட்பிரிவுகள் :**

1 முதல் 5 பாசுரங்கள் முறையே பறை தரல், நோன்பின் விதிகள், மழை வேண்டல், கண்ணன் பிறப்பு ஆகியவையும், 6 முதல் 15 பாசுரங்கள் வரை, 10 பாசுரங்கள் கன்னிப் பெண்கள் ஒருவரை ஒருவர் எழுப்ப, எழுந்து ஒன்று சேர்வது பற்றியும், 16 முதல் 22 வரை 7 பாசுரங்கள், அனைவரும் சென்று நந்தகோபனுர் மாளிகையில் கண்ணனை எழுப்புதல் பற்றியும், 23 முதல் 30 வரை 8 பாசுரங்கள் வேண்டுதல், போற்றி, வரலாறு, நோன்பின் தொன்மை, இம்மை வாழ்வு, திருக்காப்பு ஆகியவை பற்றியும் கூறுகின்றன.

திவ்யப் பிரபந்தங்களில் முதலாயிரத்தைச் சேர்ந்த திருப்பாவைப் பிரபந்தத்தை வைஷ்ணவர்கள் மட்டுமல்லாது இந்து சமயத்தவர் அனைவருமே, மார்கழி மாதத்திலே, வைகறையிலே நீராடி ஓதுதல் மிகமிக அவசியம்.

கடிகார முட்கள் ஓடுவதற்கு முன்பே ஓடும் தற்காலத்து வாலிபர்கட்கு, இளம் யுவதிகட்கும் திருப்பாவை-திருவெம்பாவை கருத்துக்கள் மிகமிகத் தேவை. வரதட்சணை கொடுமை, மாமி-கணவன் கொடுமை போன்றவைகள் தலை தூக்கும் இக்காலத்தில் அக்கொடுமைகளை புரியும் கல்நெஞ்சக்காரர்களும் ஒரு முறை-திருப்பாவை-படித்தாலே போதும்; அதன் ஆழ்ந்தக் கருத்துக்களை ஆழ்ந்த கவனத்துடன் கேட்டாலே போதும்; அவர்கள் மனம் தானுகவே திருந்திவிடும்.

அத்தகு தெய்வீகத் திருப்பாசுரங்கள் ஒவ்வொன்றிற்கும் நம் 'லயச் சித்ர ஓவியக் கலைஞர்' சசி அவர்கள், முழு பக்க தெய்வீக சித்திரங்களை வரைந்து அளிக்கின்றுர் ஸேவார்த்திகளுக்காக.

திருமாலின் திருவவதாரமாக திருமலையில் நின்று திருவருள்புரியும் ஸ்ரீ திருவேங்கட மாமலையோனின் பெருங் கருணையால்-இத்திருப்பாவையை கண்ணுற்றோரும், கற்றோரும், கேட்டோரும் சீரும் சிறப்பும் செல்வமும், பேரும் புகழும் பெருமையும் பெற்று வையத்துள் வாழ்வாங்கு வாழ பிரார்த்திக்கின்றேன்.

# ஓங்கி உலகளந்த உத்தமனே!

''திருமால், இந்திரனின் வேண்டுகோளுக்குச் செவி சாய்த்து, வாமன திருவவதாரம் புரிந்து, மகாபலி சக்கரவர்த்தியிடம் அணுகி மூன்றடி மண்ணளக்க, வானளாவி வளர்ந்து ஈரடியால் மூன்று உலகங்களையும் அளந்த உத்தமனை ஸ்ரீமந் நாராயணனின் திருநாமங்களைப் போற்றித் தியானித்து நாங்கள் அனைவரும் திருப்பாவை நோன்பிற்கு அதனையே கருவாக சங்கற்பித்து ஸ்நானம் செய்வோம். அவ்வாறு, உத்தமனின் பேர் பாடி நீராடுவதால், நாடு முழுவதும் ஒரு தீங்கும் துயரமும் இல்லாமல் மாதந்தோறும் மூன்று முறை மழை பெய்யும். பெய்த மழையால் நீர்வளம் பெற்ற நிலவளத்தில், உயர்ந்து - தழைத்து - வளர்ந்த பெரும் நெல் மணிகளை உடைய நெற் பயிர்களின் ஊடே, கயல் மீன்கள் துள்ளி மகிழவும், அழகிய குவளை மலர்களில், புள்ளிகளை பெற்ற வண்டுகளும் கவலையின்றி உறங்குகின்றன.

தன் கன்றுக்கும் ஈந்து, தன்னைக் கண்ணும் கருத்துமாயப் பேணுவோர் நலனில் கண் வைத்து, குடம்குடமாய்க் கறக்க கறக்க-சலிக்காமல் அமுதமன்ன பாலினைச் சொரிந்து கொண்டே அசைவின்றித் தொழுவத்தில் நிற்கும் வள்ளல் பெரும் பசுக்கள் என்றென்றும் நீங்காத நிறைநத செல்வங்களாகும் வாழ்க்கையில், எம்பாவையே!'' என்று எடுத்துரைக்கிறுள் ஸ்ரீ ஆண்டாள.

ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி
நாங்கள்நம் பாவைக்குச் சாற்றிநீர் ஆடினுல
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்து
ஓங்கு பெருஞ்செந்நெ லூடு கயல்உ கள
பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்ப
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய்

''உன்வரப்பு உயர்க'' என்று வாழ்த்தினுர் ஔவையார். வரப்புயர நீர் உயரும்; நீர் உயர நெல் உயரும்; நெல் உயர குடி உயரும்; குடி உயர கோன் உயரும். இக்கருத்திற்கு ஒப்பவே ஸ்ரீ கோதை 'திங்கள் மும்மாரி பெய்து' என்று போற்றுகிறுள். கண்ணனை - கார்முகில் வண்ணனையே அனைத்து பயனுகக் கொண்டு வேருெரு பயனை எண்ணுது - 'அவன்' நாமத்தையே சங்கீர்த்தனம் புரிந்து, ஸ்நானம் செய்து, மனம் மொழி மெய்யால் நோன்பு நாற்ருல் நாட்டில் நீர் வளம் - நெல் வளம் - பால் வளம் ஆகியவைகள் குன்ருது குறையாது என்றென்றும் நிறைந்து நிற்கும் என்கிறுள் கோதை.

'இதயத் தெய்வம் எது?' என்பதற்கு முதல் பாசுரத்திலேயே ''நாராயணனே'' என்கிறுள் 'அவன் எங்கே உள்ளான்?' என்பதற்கு, ''பாற்கடலுள் பையத் துயின்ற பரமன்'' என்று இரண்டாம் பாசுரத்தில் குறிப்பிடுகின்றுள். 'என்ன செய்கிறுன்?' என்பதற்கு ''ஓங்கி உலகளந்த உத்தமன்'' என்று இந்த மூன்ரும் பாசுரத்தில் அவனுடைய அரும்பெருஞ் செயலை போற்றுகிறுள்.

'உத்தமன் பேர்பாடி'ஞல் - உலகில் தொடரும் தொல்லைகள், துயரங்கள், துன்பங்கள் யாவும் தொடராது; பற்ருது.

'' பற்றுக பற்றற்ருன் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு''

என்பார் வள்ளுவப் பெருந்தகை. ஆழிசூழ் புவியில் ஆன்மாக்கள் இறையருள் இன்பத்தில் களித்து மூழ்கிடுவதையே 'கயல் உகள' என்றும், ஞானிகளின் ஹிருதய புஷ்பங்களில் இறைவன் வண்டாக நாடி-தேடி-ஓடி-வந்து கண் வளர்வான் என்பதையே ''பொறி வண்டு கண்படுப்ப'' என்றும் உட்பொருளாக்கிக் கூறுகின்றுள் ஸ்ரீகோதை. ஒரு நாட்டின் செழிப்பை - இயற்கை வளத்தை, செல்வச் சிறப்பை, வண்ணங் கொண்டு புனையா ஓவியமாக்கியுள்ளாள் இப்பாசுரத்தின்மூலம் ஸ்ரீ ஆண்டாள். ஆனுல் எழிலோவியமாக்கி நம் ஸேவார்த்திகளுக்காக அளிக்கிருர் நம் ஓவியர் 'சசி'

# ஆழிமழைக் கண்ணா!

“திருமாலின் கரிய திருவுருவம் போன்று திகழ்வது கரு நீலக்கடல். அக்கடல் போன்று பரந்து விரிந்த கருணையும், அதன் ஆழத்தைப் போன்ற ஆழ்ந்த அருளையும், ‘யார் உண்மை யாக தியானித்து பக்தி செலுத்துகிறார்களோ’, அவர்களுக்கு மழையென நின் திருவருளை பொழிய வைக்கும் என் கண்ணன்ன கண்ணா!

நீ, கையிருப்பாக எது ஒன்றையும் ஒளித்து வைத்துக் கொள்ளாமல் அருள் புரிய வேண்டும். நீலவண்ணம் பெற்று கொண்டு வெண்ணிற அலைகளை அலையலையாய்த் தவழவிடும் ஆழ்பெருங்கடலினுள் புகுந்து, அந்நீரை முகந்து கொண்டு, பேராரவாரஞ் செய்து வானத்தில் நிறைந்து,—

முக்காலத்திற்கும் உரிய முதல்வனை, திருமலையில் எழுந்தருளியிருக்கும் திருமால் திருவேங்கட மாமலையோனின் கரிய-பெரிய-திருவுருவத் திருமேனி போல, கார்மேகங்களின் உடல்கள் கருமை வண்ணங்கொண்டு விண்ணில் தோன்றிட,—

வலிமை மிக்க பேரெழில் பெற்ற திருத்தோள்களையும், உலகமுய்யத் தோன்றிய உந்தித் தாமரையையுமுடைய முழுமுதற் தெய்வமான எம்பெருமானின் வலத்திருக்கரத்தில் மின்னி மின்னிச் சுழலும்‘சக்கரம்’போல-ஆயிரங்கோடி மின்னல்கள் மின்னிட; இடத்திருக்கரத்தில் விளங்குகின்ற வலம்புரியான ‘பாஞ்ச சந்நியம்’ ஒலிக்கும் பேரொலி ஒப்ப பேரிடிகள் சப்திக்க; தர்மத்தை நிலைபெறச் செய்ய, அவன் தோளில் கிடக்கும் ‘சார்ங்கம்’ என்னும் வில்லில் இருந்து புறப்பட்ட அம்புகளே போல, சரேல் சரேலென வீசி, மழையே நீ பெய்க!

உலக உயிர்கள் அனைத்தும் உயர்ந்து, சிறந்து வாழவும், நாங்களும் மன மகிழ்ந்து, மார்கழி நோன்பு நோற்றிட நீராடிடவும், காலந்தாழ்த்தாமல் மழையே ‘நீ பெய்க!’ என்று ஸ்ரீ ஆண்டாள் தன் தோழிகளுடன் வேண்டிய வண்ணம் ஸ்ரீ கண்ண பிரானின் திருவடிகளைத் தொழுகிறாள்.

ஆழி மழைக்கண்ணா! ஒன்றுநீ கைகரவேல்
ஆழியுள் புக்கு முகந்துகொடு ஆர்த்தேறி
ஊழி முதல்வ னுருவம்போல் மெய்கறுத்துப்
பாழியந் தோளுடைப் பற்பநா பன்கையில்
ஆழிபோல் மின்னி, வலம்புரி போல் நின்றதிர்ந்து,
தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழைபோல்
வாழ உலகினில் பெய்திடாய், நாங்களும்
மார்கழி நீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்

மழையின் வருகை ஏன் என்பதற்கு - காரணத்தை முன் பாசுரத்தில் விளக்குகிறாள் கோதை. பகவானையே தியானிக்கும் பக்தைகள் பகவானைத் தவிர வேறு எந்தத் தெய்வத்தையும் பிரார்த்திப்பது இல்லை. பர்ஜந்யனோ (மேகமோ) இவர்களை - கன்னிப்பாவை பக்தைகள் இடும் கட்டளையை நிறைவேற்ற எதிர்நோக்கியுள்ளான். இந்நிலையில், ‘கன்னியர்கள் நோற்பதென்ன! மழை பெய்வதென்ன!’ என்று ஆயர்குல முதியவர்கள் புகழ்ந்து பாராட்டும் வண்ணம் ‘பெய்க’ என்று கட்டளை இடுகின்றனர் பாவையர்கள்.

யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் - என்னும் வாக்கிற்கு ஏற்ப - கடலில் நீரை முகந்ததும் திருமாலின் திருவுருவம் பெற்றதால் - மனம் பூரித்து - சக்கரம் போல மின்னி, வலம்புரி சங்கு போல ஒலித்து, அவ்விறைவன் நாமத்தை உலகமெங்கும் பரவச் செய்து, தான் பெற்ற இன்பத்தை மழையென பொழிவிக்கின்றது மேகம்.

விருப்பு வெறுப்பு இன்றி பொழிகின்ற ‘மழை’ போல - திருவேங்கட மாமலையோனே! திருமாலே! கருமுகில் கண்ணா! உன் அருளும் பூர்ண கருணையும் மழையென இறங்கி வந்து - உலகையும், உன்னையே நினைக்கும் உள்ளங்களையும்-நலம், வளம், பலம் குன்றாமல் வளரும் வண்ணம் செய்வாய் என்ற நம்பிக்கை மின்னலென முழங்குகின்றது. ஓவியர் சசியின் கைவண்ணம் மேலே.

# தில்லையம்பதி

கோயில் என்றாலே சிதம்பரத்தைக் குறிக்கும். சைவர்களுக்குக் கோயில் சிதம்பரம். பொன்னம்பலம் என சிதம்பரத்தை வழங்குவதுண்டு. திருவாசகத்தில் சிதம்பரம் 65 இடங்களில் செப்பப் பெறுகிறது. "திருவாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார்" என்பர். அத்தகு திருவாசகத்தை அருளிய மாணிக்கவாசகர் திருவாசகத்தின் பொருள் கூத்தப்பெருமானே என்று காட்டித் தில்லைத்தலத்திலேயே இரண்டறக் கலந்து திருவடி நிழலில் ஒன்றினர் என்பது அறிந்ததே.

பன்னிரு திருமுறைகளுள் திருவிசைப்பா திருப்பல்லாண்டு, திருமந்திரம், பதினோராம் திருமுறை பெரிய புராணம் ஆகிய அனைத்திலும் தில்லைக் கூத்தன் பெருமை மிகவும் பேசப்பட்டுள்ளது.

திருநீலக்கண்ட நாயனார், திருநாளைப்போவார் நாயனார், கூற்றுவ நாயனார், கோச் செங்கட் சோழ நாயனார், கணம்புல்ல நாயனார் ஆகிய அறுபான் மும்மை நாயன்மார்களுள் ஐவரும், மறைஞான சம்பந்த சிவாச்சாரியார், உமாபதி சிவாச்சாரியார் ஆகிய சந்தானக் குரவர் நால்வருள் இருவரும் வீடுபேறு அடைந்த பெருமை பெற்ற தலம் தில்லை. மாணிக்கவாசகப் பெருமான் திருச்சிற்றம்பலக் கோவையார் பாடி அருளிய பதி. சேரமான் பெருமாள் நாயனார் "பொன் வண்ணத்து அந்தாதி" பாடிய புண்ணியப்பதி. சேக்கிழார் அடிகள் "பெரிய புராணம்" பாடி யானைமீது அமர்ந்து அநபாயச் சோழனால் சிறப்பிக்கப்பெற்று அரங்கேறிய அழகிய பதி தில்லை. நம்பியாண்டார் நம்பியால் தேவாரப் பதிகங்கள் கண்டெடுக்கப்பட்ட தலம் இத்திருத்தலம் ஆகும். தேவார ஆசிரியர்களாற் பாடப்பெற்ற திருக்கோயில்களுள் முதன்மைத் தலமாக வைத்து எண்ணப் பெறுவதும் அடைமொழி யேதுமின்றிக் கோயில் எனப் போற்றப் பெறும் தனிச்சிறப்புடையதும் சிதம்பரம் என்னும் தில்லைப் பதியாகும்.

தில்லைப் பெருங்கோயிலாகிய இதன் கண் உலகுயிர்களை இயக்கியருளும் முழு முதற் கடவுளாகிய இறைவன் அருவுருவாகிய சிவலிங்கத்தைத் திருமேனியாகக் கொண்டு எழுந்தருளியுள்ளான்.

சிவனை ஞானக் கண்ணால் காண வேண்டும். எல்லாவகையான பற்றுக்களையும் விட்டு, தான் என்ற பற்றையும் விட்ட பரம ஞானிகள் ஞானவிழியால் சிவத்தைநோக்கி மகிழ்வார்கள்.

"உடலுமுடல் உயிருநிலை பெறுதல்
பொருளெனவுலகம்
ஒருவிவரு மநுபவன சிவயோக
சாதனையில்
ஒழுகுமவர் பிறிதுபர வசமழிய விழி
சொருகி
உணர்வுவிழி கொடுநியதி தமதூடு
நாடுவதும்"

என்று அருணகிரிநாதர் சீர்பாத வகுப்பில் உபதேசிக்கின்றார்.

சிவபெருமானுக்கு எண்குணன் என்ற பெயருண்டு.

"எட்டுவான் குணத்தீசன் எம்மான்" என்று அப்பரும்,

"இரும்புயர்ந்த மூவிலைய சூலத்தினை
இறையவனை மறையவனை எண்
குணத்தினானை"

என்று சுந்தரரும் பாடுகின்றார்.

இத்தகு சிவபெருமான் எல்லா கோயில்களிலும் சிவலிங்க திருவுவம் கொண்டு அமைந்துள்ள கருவறை மூலத்தானம் என வழங்கப்படுகிறது. எனினும் உலக புருடனுக்கு நெஞ்சத் தாமரையாக நினைந்து வழிபடப் பெறும் தில்லைப்பதியிலும் திருமகள் வழிபடும் திருவாரூரிலும் சிவலிங்கத் திருமேனி நிலை பெற்றுள்ள கருவறையினையே திருமுறை ஆசிரியர்கள் திருமூலட்டானம் என்று சிறப்பாகக் கூறுவர்.

"பெரும்புலியூர் விரும்பினார் பெரும்
பா ழுய்யார்
பெரும்பற்றப் புலியூர்மூ லட்டா
னத்தார்"

எனத் தில்லைப் பெருங்கோயிலில் அமைந்துள்ள திருமூலட்டானமே கூறப்படுகிறது.

சிவகாமநெறியில் நின்று இறைவனைப் பூசிக்கும் சைவ முனிவராகிய வியாக்கிர பாதர், எவ்வுயிர்களும் திருவருளைப்பெறுதற்கெனச் செய்யும் பரார்த்த பூஜையினைத் தில்லை திருமூலட்டானத்திலும், நாள்தோறும் தாம் தவறாது செய்தற்கரிய ஆன்மார்த்த பூஜையினைத் தில்லையின் மேற் திசையில் தாம் அமைத்துள்ள திருப்புலீச்சரம் என்னும் திருக்கோயிலிலும் செய்துவந்தார். அந்நிலையில் திருப்பாற் கடலில் அறிதுயிலமர்ந்த திருமாலுக்குப் பாம்பணையாயிருந்து தொண்டு புரிந்த ஆதிசேடன் சிவபெருமானது திருக்கூத்தினைக் காண நினைந்து உள்ளம் பூரித்து திருமாலின் உவகை நிலையினை உணர்ந்து, தானும் அத்தகைய பேரானந்தத்தில் திளைக்க விரும்பி திருமாலைப்பணிந்து தன் மகன் அனந்தன் என்பவனைத் திருமாலுக்குப் பாம்பணை பணிபுரிபவனாக அமர்த்தித் தவத்தினை

திருமதி எம். கலா பி. ஏ., — வேலூர்.

மேற்கொண்டு பிலத்தன் வழியாகத் தில்லை வனத்தை அடைந்தார். வியாக்கிர பாதருடன் தில்லை திரு மூலட்டானரை இறைஞ்சி தமக்குரிய ஆன்மார்த்த பூசைக்குரிய மூர்த்தி யாக அனந்தீசர் என்னும் சிவலிங்கத் திருமேனியை வழிபட்டு வாழ்ந்தார். பதஞ்சலி முனிவர் செய்த தவத்தின் பலனுகச் சிவபெருமான் தில்லை பெருங்கோயிலிலே தை மாதத்தில் பூசமும் வியாழக்கிழமையும் கூடிய நன்னுளிலே நண்பகற் பொழுதினிலே சிவகாமி அம்மை கண்டு களிக்க சிதா காசப் பெருவெளியாகிய திருவம் பலத்திலே அற்புதத் தனிக் கூத்தி யற்றும் ஆடவல்லானுகத் தோன்றிப் பதஞ்சலியும் புலிமுனியும் கண்டு போற்ற ஆனந்தத் திருக்கூத்தினை நிகழ்த்தியருளினுன். அத்திருக் கூத்தினைக் கண்டு மகிழ்ந்த பதஞ்சலி முனிவர் தாங்கள் கண்ட அருட்கூத் தினை உலகத்திலுள்ளோர் எல்லாரும் எக்காலத்தும் கண்டு உய்திபெறும் வண்ணம் இங்கு அனவரத தாண்ட வம் புரிதல் வேண்டும் என இறை வனை வேண்டிக்கொண்டமையால் அம்பலக் கூத்தனுகிய பெருமான் அன்று முதல் இன்றுவரை இடை யீடின்றி அற்புதத்திருக்கூத்தினை நிகழ்த்தியருள்கின்றுன் எனச் சிதம் பரத்திற்குரிய தலப்புராணம் கூறு கின்றது.

திருமூலட்டானேசுவரர் இலிங்க வடிவில் இருக்கின்றவர். இது சுயம்பு மூர்த்தி.

''தொல்லை வினைவந்து சூழாமுன்
தாழாமே
தில்லை வணங்கி உமையென்னும்—
மெல்லியல் ஓர்
கூற்றுனைக் கூற்றுருவங் காய்ந்தானை
வாய்ந்திலங்கு
நீற்றுனை நெஞ்சே நினை''
—அம்மையார்.

சிவபெருமானுர் ஆன்மாக்கள் தம்மை வழிபட்டுய்யுமாறு கொண்ட நிர்க்குண சொருபத்தின் சகல வடிவமே இலிங்கமாகும். அது சதாசிவ சொரூபம். கர்மசாதாக்ய வடிவ மாகிய அதன் பீடம் சக்தியையும் இலிங்க பாகம் சிவத்தையும் உணர்த் தும். இச்சாதாக்யத் திருமேனி ஸர் வான்மாக்களையும். சர்வண்டங் களையும் அடக்கியிருக்கும் பரமகார ணனை விளக்கும்.

உலக மக்கள் அனைவரும் எளி தில் தியானித்து வழிபாடு புரிய சிறந்த சின்னமாகும். சிவலிங்க மெனும் சொல்லை ஏழு வேற் றுமைகளிலும் வைத்துப் பிரித்து பொருள் கொள்ளலாகும். முறையே முதல் வேற்றுமையால் சிவனே இலிங்க வடிவன். 2. சிவனை உரு வாகக் கொண்டதே இலிங்கம். 3. சிவனுேடே அச்சிவனுலேயே உண் டான இலிங்கம். 4. சிவனின் பொருட்டு சிவபூஜைக்காக இலிங்கம். 5. சிவனிடமிருந்து (இது முதலான சகல சின்னங்களும் உண்டானது) சிவலிங்கம். 6. சிவனுடைய வடி வமே சிவலிங்கம். 7. சிவனிடத்தில் லேயே சகலமும் வியாப்தம் — இலிங்கம்.

இவ் இலிங்கம் பரார்த்தலிங்கம் என்றும் இஷ்டலிங்கம் என்றும் இருவகையாகும். பரார்த்தலிங்கம் என்பது ஐவகைத்து. சுயம்பு, காண பம், தெய்வீகம், ஆரிஷம், மானுஷம் என்பன.

இஷ்டலிங்கம் என்பது பச்சை மண்ணுலாயது. சுட்ட மண் ணிலிங்கம் மரத்தாலானது, உலோகத்தினுலான வார்ப்புலிங்கம், நவரத்தினங்களாலான இலிங்கம் மணிலிங்கம், இரசலிங்கம், பாண லிங்கம், சுயம்புலிங்கம் என்பன.

இரசலிங்கமும், சுயம்புலிங்கமும் அவற்றில் அதிக பயன் தருவன. இக் கருத்தை மறை ஞான சம்பந்த தேவ னுர் அருளிய,

''மண் சுட்ட மண்மரங்கல் வண்செம்
பெழவாயு
மொண்மை யிரத்தினந்தா னும்''

''மணிவான லிங்கமிர தஞ்சுயம்பு தானு
மெணியிவை யொன்றுக் கொன்றேற்
றம்''

எனும் அடிகளால் அறியலாம்.

பக்தி மிக்கு சிவனொருவனையே சதா நினைந்து அன்பு மிக்கு பூசித்தா லன்றி எவ்வளவு முறையோடு பூசித் தாலும் பயனில்லை என்பதை,

''நட்ட கல்லை தெய்மென்று நாலு
புட்பஞ் சாத்தியே
சுற்றி வந்து மொனமொனென்று
சொல்லுமந்திரமேதடா
நட்டகல்லும் பேசுமோ நாதனுள்
சுட்ட சட்டி சட்டுவங் கறிச்சுவை
யறியுமோ''

என்ற சிவவாக்கியம் விளக்கம் கூறும்.

திருமூலர் தமது திருமந்திரத்தில்,

''மானுட ராக்கை வடிவு சிவலிங்கம்
மானுட ராக்கை வடிவு சிதம்பரம்
மானுட ராக்கை வடிவு சதாசிவம்
மானுட ராக்கை திருக்கூத்தே''

என்கிருர். அதாவது சிதம்பர சபை யின் கண்ணே அனைத்துலகும் உய்யும் வண்ணம் உமாதேவியார் காண அன வரதமும் ஆனந்த கூத்தாடுகின்ற வியக்தலிங்கமாகிய சபாபதியும், அவர் முன்னர் அழகிய ''திருச்சிற் றம்பலமுடையார்'' எனும் திருநாமத் தோடு விளங்கும் சதாசிவ சொரூப சகல மூர்த்தியாகிய சந்திரமௌலீஸ் வரரும் நிர்க்குணமாய் வேதங்களில் அறியப்படாதாய் நிரதிசயானந்த நிர்மலமாய் பரம ரகசியமாய் விளங் குகின்ற அருவமான ஆகாசலிங்க மெனவும் சிதம்பரமெனவும் படுகின்ற இரகசிய ஸ்தானமும், பதஞ்சலி, வியாக்ரபாதராற் பூசிக்கப் பெற்ற சுயம்புமூர்த்தியும் பாற்கடல் ஈந்த பிரானுமாகிய ஸ்ரீ மூலநாத சிவலிங் கமும் ஒரு கருத்திற் கொள்ளற் பொருட்டே எனத் தோன்றும்.

சிவலிங்கத்தின் அடிப்பாகம் பிரம்ம பாகம் எனவும் மத்தியில் விஷ்ணு பாகம் எனவும் மேற்பரப்பு உருத்திர பாகம் எனவும் கருதி

பூசிக்க வேண்டுமாம். யாவும் பஞ்ச பூதங்களாலமைத்து அங்ஙனமைந்த சகல சராசர ஜீவராசிகளேயும் மண்ணிற் ருேற்றி, நீரிற் காத்து, நெருப்பிலழித்து, காற்றில் மறைத்து, ஆகாயலத்திலருளும் ஆற்றல் படைத்த எம் சிவனுர் அவ்வவரின் பக்குவநிலே கேற்ப அருள வேண்டி தமது ஐந்து திருமுகங்களேயும் அயன்-அரி-அரன்-மகேசன்-சதாசிவன் எனப் பஞ்ச பிரம்மமாக விரிகிருன். இக்கருத்தை,

''மலர்ந்த வயன்மா லுருத்திரன் மகேசன்
பலந்தரு மைம்முகன் பரவிந்து நாதம்
நலந்தருஞ் சத்தி சிவன்வடி வாகிப்
பலந்தரு லிங்கம் பராநந்தி யாமே''.

எனும் திருமந்திரம் உணர்த்தும்.

அன்பு காட்டுகின்றவர்கட்கு அருள் பாலிப்பவன் சிவன். சிவநேயச் செல்வர்கட்கு அன்பே உயிர் மூச்சு. அன்பு உரையாடுவதே சிவார்ச்சனே; அன்பு நெறி வழி நடப்பதே சிவாலய தரிசனம். இதை,

''அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாவரும் அறிகிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே''

என்கிறது திருமூலர் திருமந்திரம்.

சிவபூஜையில் வில்வ இலேக்குச் சிறப்பான இடம் உண்டு. வில்வ மரத்தை உலுக்கிய குரங்கை முசுகுந்த சக்ரவர்த்தியாக்க ஆக்கியதாக ஈசனின் பெருமையைத் திருவருட்பா உரைக்கிறது.

தில்லே நடராசர் நடனமாடும் ரூபமாக விளங்குகிருர். நாம் ஆனந்தம் அடைய ஆனந்தமூர்த்தியை வணங்குதல் வேண்டும். அவர் ஆனந்த நடனம் புரிவதால் எப்போதும் ஆனந்தத்தோடு விளங்குகிருர் என்பது பொருளாகும். இந்நடராசர் விக்ரகம் ஒரு மனிதன் நடமாடும் ரூபமாக அமைந்திருக்கிறது. வலது காலே கீழே ஒரு அரக்கன் மிதித்து மேல் இடக்காலே மேலே உயர்த்தி, ஓர் இடக்கையால் தூக்கிய பாதத்தைக் காட்டி மற்றைய இடக்கையில் அக்னி தாங்கி ஒரு வலக்கையிலே அபய ஹஸ்தம் பிடித்து மற்ருெரு வலக்கையில் உடுக்கிண்ப் பிடித்து நிற்பதாக இத்திருவுருவம் அமைந்துள்ளது. உடுக்கிலிருந்து வரும் ஒலியால் அண்ட பிண்ட சராசரங்கள் எல்லாம் பெரிய தீயிலிருந்து ஊற்று நீரிலிருந்து குமிழிகள் வருவன போன்று இறைவனிடமிருந்து தோன்றுகின்றன என்பதை இது குறிக்கும். வலக்கையிலுள்ள அபய ஹஸ்தம் அமைதிக் குறியைக் காட்டும். இறைவன் திருவடியே தஞ்சம் என வந்தடைந்தார்களேக் 'காப்பாற்றுவேன்' எனக் கூறுவது போல அமைந்துள்ளது. இடக்கையில் தாங்கியுள்ள தீ எல்லா உலகங்களேயும் இறுதியில் அநிந்தயமாக்கும் சம்ஹார சக்தியை உணர்த்தும். ஊன்றிய வலக்கால் படைத்தல் முதலிய விஷயங்களே எவர்க்கும் விளங்கவொட்டாமல் மறைக்கும் மாயா சக்தியை உணர்த்தும். தூக்கிய பாதம் எல்லார்க்கும் பயக்கும்படியானதும் அநாதியும் அநந்தமாயுள்ள சிருஷ்டியாதி நாடகத்திலிருந்து உயிர் விடுபட்டு ஓய்வடையும்படி செய்யும் நிழல் போன்ற கடவுளின் கருணேயைக் குறிக்கும். நடராசரது ஆனந்த தாண்டவம் ஆக்கல், அளித்தல், அழித்தல், அருளல், மறைத்தல் என்னும் ஐந்தொழிலே விளக்கும்.

இதை,

''தோற்றம் துடியதனில் தோயும் திதி அமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்— ஊற்றமாய்
ஊன்று மலர்பதத்தே உற்ற திரோதம் முத்தி
நான்ற மலர்பதத்தே நாடு''.

இத்தகு தில்லே பெருமானேக் குறித்து தவம் செய்து வேத இருதயமாக்கி ஐந்தெழுத்தை தியானித்தல் வேண்டும். ஐந்தெழுத்து ஒன்றே ஆன்மாக்களுக்கு அரண் புரியும்.

இதை

''விண்ணுற அடுக்கிய விறகில் வெவ் வழல்
உண்ணிய புகில் அவை ஒன்றும் இல்லேயாம்
பண்ணிய உலகினில் பயின்ற பாவத்தை
நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயாவே''

என்பார் அப்பர்.

ந — திரோத மலம்
ம — ஆணவ மலம்
சி — சிவம்
வ — திருவருள்
ய — ஆன்மா

யகரமாகிய ஆன்மா வகரமாகிய திருவருள் துணையால் நகரமாகிய திரோத சக்தியைக் கொண்டு மகரமாகிய ஆணவத்தை யகற்றிச் சிகரமாகிய சிவத்தைச் சேர்தல் வேண்டும்.

சிவனுரின் சிறப்புத்தலமாக உள்ள தில்லேயின் பெருமை சிந்தைக்கு அப்பாற்பட்டது. அகக்கண்ணுலே கண்டு களிக்கத்தக்கது. இதனே தெய்வச் சேக்கிழார்,

''கற்பனே கடந்த ஜோதி
கருணேயே உருவமாகி
அற்புத கோலம் நீடி
அருமறைச் சிரத் தின் மேலாம்
சிற்பர வியோம மான
திருச் சிற்றம் பலத்துள் நின்று
பொற்புற நடஞ் செய்கின்ற
பூங்கழல் போற்றி போற்றி''

என்கிருர். நாமும் வேண்ட வேண்டிய தில்லேயை, இதுவரை சென்று வேண்டியதில்லே என்ருலும், இனி வேண்டி முழுப்பயன் பெறுவோமாக.

★

# ஆதித்யோபஸ்தானம்

யஜுர்வேதகாரர்கள் தினந்தோறும் மாத்யாஹ்நிக ஸந்த்யா வந்தன காலத்தில் சில மந்திரங்களைச் சொல்லி ஸூர்யோபஸ்தானம் பண்ணுவார்கள்.

"तच्चक्षुर्देवहितं पुरस्ताच्छुक्रमुच्चरत् ।
पश्येम शरदश्शतं जीवेम शरदश्शतम् ॥"

என்பதும் அம்மந்திரங்களிலொன்று. இம்மந்திரங்களெல்லாம் "ரிக்" (ऋक्) மந்திரங்கள். அதனால் இவற்றுக்கு "சந்தஸ்" (छन्दः) பிரகாரம் எழுத்துக்களில் கணக்குண்டு. மேலே கொடுக்கப்பட்ட மந்திரம் "உஷ்ணிக்" (उष्णिक्) சந்தஸ். இதில் 28 எழுத்துக்கள் இருக்க வேண்டும். ஆனால் 31 எழுத்துக்கள் இதிலுள்ளன. என்ன காரணம்?

இதே மந்திரம் ரிக் வேதத்திலும் வருகிறது. 28 எழுத்துக்கள்தான் அதில் உள்ளன. அதாவது "உஷ்ணிக்" சந்தஸ்ஸுக்கு இருக்க வேண்டிய எழுத்துக்கள் ஏற்றத்தாழ்வின்றி சரியாக இருக்கின்றன. அதிலுள்ளபடி அதை எழுதுவோம்:—

"तच्चक्षुर्देवहितं शुक्रमुच्चरत् ।
पश्येम शरदश्शतं जीवेम शरदश्शतम् ॥"

என்று உள்ளது. இரண்டு பாடங்களிலும் உள்ள வித்யாஸம் ஸ்பஷ்டமாகக் காணப்படுகிறதல்லவா? யஜுர்வேத பாடத்தில் "पुरस्तात्" என்னுபதம் இடம் பெற்றுள்ளது; ரிக் வேதத்தில் இஃதில்லை. அதனால் 28 எழுத்துக்கள் மட்டுமே இருக்கின்றன! யஜுர் வேத பாடத்தில் "पुरस्तात्" என்னும் பதம் அதிகப் படியாக உள்ளது. அதனால் எழுத்துக்கள் 31 ஆகி விட்டன!!

இரண்டு வேதகாரர்களும் இந்த மந்திரத்தை "உஷ்ணிக்" சந்தஸ் தான் என்று ஒரே குரலால் சொல்லுகின்றனர்!!! யஜுர் வேதகாரர்கள் அதிகப்படியாகச் சேர்த்திருக்கும் மூன்று எழுத்துக்களை (पुरस्तात्—என்னும் பதத்தை) நீக்கி விட்டால் பிரச்னை தீர்ந்து விடும். அதைச் செய்ய இசையவில்லையே. இதை "உஷ்ணிக்" என்று சொல்லாமல், 31 எழுத்துக்களுள்ள வேறொரு சந்தஸ்ஸைச் சேர்ந்தது என்றாவது சொல்லவேணும். அதையும் செய்வதில்லையே!! என்ன செய்வது?

இது வேத மந்திரம். சாதாரணமான காவ்ய நாடகங்கள் போன்றதில்லை. ஒரு எழுத்தைக் கூட, கூட்டவோ - குறைக்கவோ - முடியாது. அனாதி காலமாக ஓதப்பட்டு வருகிற பாடத்தில் யாரும் "கை வைக்க" முடியாது. கடுமையான எதிர்ப்பு கிளர்ந்தெழும். யஜுர்வேதகாரர்கள் அத்தனை பேரும் 100% ஒரே குரலாக, पुरस्तात् என்னும் பதத்தைச் சேர்த்தே ஓதுகிறார்களே! ஒருவர் கூட அஃதில்லாமல் ஓதுவதில்லையே!! தொன்றுதொட்டு வேதாத்யயனம் செய்யும் ஸம்ப்ரதாயத்தில், வேத வாத்யார்கள் இப்படியே சொல்லி வைக்கின்றனர். இன்று சிஷ்யர்களாக இருப்பவர்கள் நாளைக்கே வாத்யார்களாகி விடுகின்றனர். தான் தனது வாத்யாரிடம் கேட்டு அறிந்ததையேதான் தனது சிஷ்யர்களுக்கு அவர் சொல்லி வைக்கிறார். ஒரு எழுத்து — ஸ்வரம் — கூட மாறக் கூடாது. இது தானே வேதத்துக்குள்ள தனிப்பெருஞ் சிறப்பு? இதனால் தானே ஆயிரங் கோடி வருஷ காலமாகியும், சிறிதும் மாறுபடாமல் ஒரே விதமாக வேதம் தொடர்ந்து வருகிறது? இதில் திருத்தம் செய்வதென்பது கனவிலும் கருதக் கூடாதது.

அப்படியானால் மேலே காட்டிய எழுத்து வித்யாஸம் எப்படி வந்தது? இதை எப்படி "சரி" என்று கூறுவது?

இது தீராத பிரச்னை. நேர்மையுடன் — நடுவு நிலைகுன்றாமல் அணுகினால் இது தீர்ந்து விடும். அதற்கு தைரியம் வேண்டும். பொய்யான கௌரவத்தில் ஆசை கூடாது. உண்மையைக் காப்பாற்றுவதில் ஆர்வம் வேண்டும். இதெல்லாம் "வேத ஸம்ரக்ஷணம்" பண்ணுவதாகத் தம்மைப் பிரசாரம் செய்து வரும் "வைதிகச்ரேஷ்டர்"களின் மனத்தில் பதிய வேண்டும். "அகில இந்திய வேத ஸம்மேளனம்" ஒன்று ஏற்பாடாக வேண்டும். அதில் ஆஸ்திகர்களான வேத விற்பன்னர்கள் அனைவரும் கலந்து கொள்ள வேணும். அதில் உருவாகும் முடிவை அனைவரும் ஏற்றுக்கொண்டு ஒரு புது யுகத்தைத் தோற்றுவிக்கவேணும். அதிகப்படியான இந்தப் (पुरस्तात्) பதத்தை எடுத்துவிட வேணும். "வேதஸம்ரக்ஷணம்" பண்ணும் போலிவைதிகர்கள் இப்படியெல்லாம் நடக்க விடவே மாட்டார்கள். தமது அறியாமை நாடு நகரமும் நன்கறிய அம்பலமாவதை அவர்கள் அனுமதிப்பார்களா? "अंधेनैव नीयमाना यथान्धाः" என்னும் வகையில் "குருடன் குருடனுக்கு வழிகாட்டும்" ரீதியிலேயே வேதஸம்ப்ரதாயம் சென்று கொண்டிருக்கிறது.

நாவல்பாக்கம் ஸ்ரீ தேவநாதாச்சாரியர்

உலகப்போக்கை மதிக்காமல் சுதந்திரமாய் இந்தப் பிழையை எடுத்துக் காட்டி அனைவருடையவும் நிந்தைக்குப் பாத்திரமாவதில் எனக்கும் இஷ்டமில்லைதான். மனது ஒப்புக்கொள்ளமாட்டேனென்கிறது. முதன்முதலாக இந்தப் பிழையைக் கண்டுபிடித்தவன் ஆத்மவஞ்சனை பண்ணுமல் உள்ளதை உள்ளபடி வெளிப்படுத்துகிறேன். இல்லாவிடில். "பிள்ளையார் தொப்புளில் விரலை விட்டவன்" கதையாகி விடும். ரஸிகர்கள் உண்மையை உணர வேண்டும்.

இனி இந்த மந்திரம், 28 எழுத்துக்களே உள்ள உஷ்ணிக் சந்தஸ்தான் என்பதைப் பற்பல அறிவாளிகளும் ஐயந்திரபற எழுதி வைத்திருப்பதை எடுத்துக் காட்டுவோம்.

ப்ராதஸ் ஸந்த்யா வந்தனம்—மாத்யாந்நிக ஸந்த்யாவந்தனம் — ஸாயம் ஸந்த்யாவந்தனம்-இவற்றை அந்ணர்களனைவரும் தவருமல் அனுஷ்டித்து வருகின்றனர். வைஷ்ணவர்கள்—ஸ்மார்த்தர்கள் - மாத்வர்கள்- என்றிப்படிப் பல பிரிவுகளும் அந்தணர்களுள் உண்டு. மற்றும் அவ் இனங்களில் பற்பல உட்பிரிவுகளுமுண்டு. அனைவருக்கும் தத்தம் நித்யகர்மானுஷ்டானத்திற்காதாரமான க்ரந்தங்கள் உள்ளன. "ஆஹ்நிகம்" என்னும் பெயர் பெற்ற இந்த க்ரந்தம் பற்பல பதிப்புக்களில் அச்சிடப்பட்டுள்ளன. நெடுங்காலமாகத் தொடர்ந்து வரும் அனுஷ்டான ஸம்ப்ரதாயமே இந்தப் பதிப்புகளுக்கு ஆதாரம். பிற்காலத்துப் பதிப்புகளுக்கு முற்பதிப்புகளும் ஆதாரமாம். இந்த ஆஹ்நிகக்ரந்தங்களில் அவ்வோ ஸம்ப்ரதாய பேதங்களால் சிறிது மாறுபாடு உண்டு. ஆயினும் முக்கியமான விஷயங்களில் ஒற்றுமையே காணப்படுகிறது.

வைத்யநாததீக்ஷிதீயம் என்று ப்ரஸித்தமான ஸ்ம்ருதிமுக்தாபலம் ஆஸ்திகர்களான வைதிகர்களனைவருக்கும் நன்ருகத் தெரிந்ததே. இதன் பதிப்புகள் பல இன்று வெளிவந்துள்ளன. 1907-ம் வருஷத்தில் க்ரந்த லிபியில் ஒரு பதிப்பு வெளியிடப்பட்டது. அதிலிருந்து சில வரிகளை இங்குத் தருகிறேம் :— (இதில் 277-ம் பக்கத்தில்)

"शंख:.....

"अथ मध्यमसंध्याया मासीनः प्राङ्मुखोजपेत् ।
स्व शाखाविहितैर्मंत्रै रादित्यमुपतिष्ठते ।
(பக்கம் 278ல்)
प्रदर्शयन् व्योममुद्रां आसत्येनेति मन्त्रतः ।
स्थिताजपेदूर्ध्व बाहुः सूर्यं पश्यन् समाहितः ॥'

इति । योगयाज्ञवल्क्यः—

"आसत्यर्क्षूच पूर्वे द्वे त्रिष्टुभौ कवयो विदुः ।
गायत्री तु तृतीया स्यात् चतुर्थी जगती मता ॥
उष्णिक् तच्चक्षुरास्य छन्द इत्युच्यते बुधैः ।
हिरण्यस्तूप इत्येष ऋषि र्देवोऽत्र भास्करः ॥

इति ।' என்று எழுதப்பட்டிருக்கிறது. . இவற்றுள் "तच्चक्षुः... " என்னும் மந்திரம் "உஷ்ணிக்" சந்தஸ் என்கிற விஷயம் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

"आसत्येन..." என்று தொடங்கும் மாத்யாஹ்நிகோபஸ்தான மந்திரங்களுக்கு ருஷிச்சந்தோ தேவதைகளைக் கூறுமிடமிது. இவற்றுள் முதலிரண்டு மந்திரங்களும் "த்ரிஷ்டுப்சந்தஸ்" என்று இதில் குறிப்பிடப்பட்டுள்ளது. இது தவறு. முதலாவதுதான் த்ரிஷ்டுப்சந்தஸ். இரண்டாவது அனுஷ்டுப்சந்தஸ்தான். ப்ரக்ருதவிசாரத்துக்கு அவ்விஷயம் அவசியமில்லையாகையால் அது உபேக்ஷிக்கப்பட்டது.

திருக்குடந்தை தேசிகன் என்று ப்ரஸித்தராக எழுந்தருளியிருந்த ஸ்ரீ கோபாலதேசிகனுல் அனுக்ரஹிக்கப்பட "நித்யாஹ்நிகதீபிகா" என்னும் ஆஹ்நிகக்ரந்தம், 1901-ம் வருஷத்தில், "கோ. ஸுப்ரமண்ய சாஸ்திரி" என்பவரால் அச்சிடப்பெற்றுள்ளது. இதில் 54-ம் பக்கத்தில்;

"......उपस्थाने माध्याह्निक संध्योपस्थानमिति विशेषः । "आ सत्येने" ति वदूचस्य, हिरण्यस्तूप ऋषिः आद्ययोस्त्रिष्टुप, चतसृणां गायत्री जगत्युष्णिक् त्रिष्टुभश्छन्दांसि । सविता देवता । माध्याह्निक संध्योपस्थाने विनियोगः ।......"

என்று அச்சிடப்பட்டுள்ளது. இதில் "சதஸ்ருணும்" என்று நான்கு மந்திரங்களைக் குறிப்பிட்டு அவற்றின் சந்தஸ்ஸை "காயத்ரீ-ஜகதீ-உஷ்ணிக்-த்ரிஷ்டுப்" என்று சொல்லுகிருர். இந்நான்கில் மூன்ருவதுதான் "तच्चक्षुर्देवहितं......என்னும் மந்திரம். வரிசைக்கிரமத்தில் இதை "உஷ்ணிக்" சந்தஸ்ஸாகவே குறிப்பிட்டுள்ளார். இதை வாசகர்கள் கவனிக்க வேணும். "முதலிரண்டும் த்ருஷ்டுப் சந்தஸ்" என்று இதிலும் எழுதப்பட்டுள்ளது. வைத்யநாததீக்ஷிதீயத்தை "அப்படியே" இவரும் எழுதிவிட்டிருக்கிருர். இரண்டாவது ("उद्वयं तमसस्परि......என்னும் மந்த்ரம்) த்ரிஷ்டுப்சந்தஸ் இல்லை. அனுஷ்டுப்சந்தஸ்தான். இந்த விசாரம் ப்ரக்ருதத்துக்கு உபயுக்தமில்லையாகையால் இவ்வளவில் விடப்பட்டது.

இந்தத் திருக்குடந்தைதேசிகன் ஆஹ்நிகம், கும்பகோணத்துக்கு ஸமீபத்திலுள்ள வலையபேட்டையில் எழுந்தருளியிருந்த மகாதேஜஸ்வியும் தபஸ்வியுமான நாவல்பாக்கம் ஸ்வாமியினுடைய காலத்திலும் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டிருக்கிறது. இதற்கு இவருடைய ப்ரதான சிஷ்யரும், ஜகத்விக்யாதகீர்த்தியும், அடியேனுக்கும் அடியேன் போன்ற நூற்றுக்கணக்கான சிஷ்யர்களுக்கும் மீமாம்ஸாத்யாபகாராக இருந்தவருமான ஸ்ரீ. உ. வே. D. T. தாதாச்சாரியர்ஸ்வாமி அரியதோர் முகவுரையை எழுதி அச்சிட்டு இணைத்திருக்கிருர். இதிலும் ப்ரக்ருதவிசாரவிஷயமான மந்திரம் "உஷ்ணிக்" சந்தஸ் என்றே காட்டப்பட்டுள்ளது. முன் க்ரந்தங்களில் இடம்பெற்றுவிட்ட தவறுகள் இதிலும் இடம்பெற்றுவிட்டன. ஆனு

வில்லே.

ஸ்ரீமதஹோபிலமடம் ஆஹ்நிகம் 27-ம் பட்டம் அழகிய சிங்கர் ஸாதித்ததாகக் கேள்வி. இது ஸமீப காலத்தில் 1951-ம் வருஷம் அச்சிடப்பட்டுள்ளது. இதில் 45ம் பக்கத்தில்:-

"माध्याह्निक संध्याविधिः।......उपस्थाने तु आदित्योपस्थानं करिष्ये इति संकल्प्य, आ सत्येनेत्यादिमन्त्राणां हिरण्यस्तूप विश्वामित्रकुत्स वसिष्ठा ऋषयः त्रिष्टुप् गायत्री जगत्युष्णिक् त्रिष्टुभश्छन्दांसि। आदित्यो देवता। उपस्थाने विनियोगः।" என்று அச்சிடப்பட்டுள்ளது. தொடர்ந்து "आसत्येन......" இத்யாதி மந்திரங்களும் வரிசையாகவே தரப்பட்டுள்ளன. இவற்றுள் ப்ரக்ருதவிசார விஷயமான "तच्चक्षु......" என்னும் மந்திரமும் ஐந்தாவதாக உள்ளது. சந்தஸ்களின் வரிசையிலோவெனில் "உஷ்ணிக்" சந்தஸ் நாலாவதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. நாலாவதான மந்திரம் "चित्रं देवानां......" என்பது. அது உஷ்ணிக்சந்தஸ் இல்லே. த்ரிஷ்டுப்சந்தஸ்தான். அதனுல் ப்ரக்ருதவிசார விஷயமான "तच्चक्षु......" என்னும் மந்திரத்தின் சந்தஸ்ஸே தான் "உஷ்ணிக்" என்று குறிப்பிடப்பட்டதாகக் கொள்வதற்கு ப்ரஸக்தி உள்ளது. வரிசையில் இடம் மாறி விடுவது அவ்வளவு முக்கியமில்லே. இஃதொன்றுதானே இந்த மந்திரங்களுள் உஷ்ணிக் சந்தஸ்ஸில் வருகிறது! அதையேதான் மேற்படி க்ரந்தகாரர் குறிப்பிட்டிருப்பது ஸாத்யம். அதையே நாமும் ஏற்றுக் கொள்வோம். மற்ற மந்திரங்களின் சந்தஸ்களிலும், ரிஷிகளின் வரிசையிலும் நிறைய மாறுபாடுகள் இதிலும் இல்லாமலில்லே. ப்ரக்ருதத்துக்கு அவசியமில்லாமையால் அவை தற்சமயம் உபேக்ஷிக்கப்பட்டன.

(அடுத்த இதழில் முடியும்)

திருமலை திருப்பதி தேவஸ்தானம்

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்னதான திட்டம்

இவ்வுலகில் ஏழைகளுக்கு உணவு இடுதலைவிட வேறு எந்தவிதமான தர்மமும் சிறந்தது இல்லை. அதிலும் திருவேங்கடவன் குடி கொண்டிருக்கும் திருமலையில் யாத்திரிகளுக்கு இலவசமாக உணவு வழங்குதல் மிகவும் அருளுடையது. இவ்வகையில் தி.தி. தேவஸ்தானம், திருமலைக்கு வரும் பக்தர்களுக்கு இலவசமாக "முழுச் சாப்பாடு" அளிக்கும் வகையில் "ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்னதான திட்டம்" ஒன்றினை செயற்படுத்தியுள்ளது.

## திட்டம் எப்படி வேலை செய்கிறது

* தேவஸ்தானத்திற்கு ரூ. 10 இலட்சம் அல்லது அதுபோன்று பல மடங்கு நன்கொடை அளிக்கவேண்டும். தி.தி.தே. அத்தொகைக்கு ஈடான தன் பங்கினைச் செலுத்தும். மொத்தத்தொகைக்கு வரும் வட்டித் தொகையிலிருந்து நாள்தோறும் 400 யாத்திரிகர்களுக்கு உணவு வழங்கப்படும்.
* நன்கொடைகள் யாவும் தனிமனிதர்கள், சிறு கழகங்கள், தனியார் நிறுவனங்கள் ஆகியோரிடமிருந்து பெறப்படும்.
* உணவு அருந்தும் கூடத்தில் நன்கொடையாளர்களின் பெயர் முக்கிய இடத்தில் வைக்கப்படும்.

## பயன்களும் உதவிகளும்

* வருடத்தில் மூன்று நாட்களின்போது திருமலையில் நன்கொடையாளர் தன் குடும்பத்தாருடன் இலவசமாகத் தங்கவும், மேலும் அவர்களுக்கு ஹாரத்தியுடன் இலவச தரிசன வசதியும் செய்து தரப்படும்.
* எண் 80 (ஜி) பிரிவின்கீழ் நன்கொடையாளர்கள் வருமான வரிவிலக்குப் பெறுவார்கள்.
* நாள்தோறும் நடைபெறும் இறைவனின் கொலுவு சேவையின்போது நன்கொடையாளரின் பெயரும் கோத்ரமும் வாசிக்கப்படும்.
* இத்திட்டப்பணியினை மேற்பார்வையிடும்வகையில், ஆலோசனைக்குழுவின் உறுப்பினர்களாக நன்கொடையாளர்கள் சேர்க்கப்படுவர்.

இதுவரை கீழ்வரும் நபர்கள் இத்திட்டத்திற்கு நன்கொடை அளித்துள்ளனர்.

1. திரு. எல். வி. ராமய்யா - சென்னை. ரூ. 10 இலட்சம்
2. திரு. மன்சிங்கா - பம்பாய். ரூ. 20 இலட்சம்
3. திரு. ஆர். பி. கோயங்கா - கல்கத்தா ரூ. 10 இலட்சம்
4. திரு. ஈஸ்வர் பிரஸாத் பொத்தார் - கல்கத்தா. ரூ. 10 இலட்சம்
5. திரு. நாட்டுபையா அம்பானி - ரிலையன்ஸ் டெக்ஸ்டைல் இண்டஸ்ட்ரீஸ் - பம்பாய் ரூ. 10 இலட்சம்
6. திரு. பி. எம். கைதான் — கல்கத்தா — ரூ. 10 இலட்சம்.
7. திரு. ஜலான் — கல்கத்தா — ரூ. 10 இலட்சம்.
8. திரு. எம். ஆர். சாப்ரியா அற நிறுவனம் எண் 1 — பம்பாய் — ரூ. 10 இலட்சம்.
9. திரு. ராம்நாத் கோயங்கா — சேர்மேன், இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகைக் குழு — ரூ. 10 இலட்சம்.

மேலும் பல பக்தர்கள் பயன் பெற தாராளமாக உதவுங்கள்.

மேலும் முழு விவரங்களுக்கு :

செயலாட்சித்தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி - 517501. ஆந்திர மாநிலம்.

**செயலாட்சித்தலைவர்.**

# கீதை காட்டும் நல்வழி

மோக்ஷ ஸன்யாஸ யோகம்

அத்தியாயம் — 18

பகுதி — 5

பற்றற்றவனுக்கு வினைப்பயன் இல்லையெனில், பற்றுடையவனின் கதி என்ன ஆகிறது என்ற கேள்வி எழுகிறது. இதற்கான விடை கீழ்க் காணும் சுலோகத்தில் வருகிறது.

அனிஷ்டமிஷ்டம் மிச்ரம் ச
த்ரிவிதம் கர்மண: பலம் |
பவத்யத்யாகினும் ப்ரேத்ய
ந து ஸன்யாஸினும் க்வசித் ||
(18-12)

'தியாகிகள் அல்லாதவர்களுக்கு மரணத்திற்குப் பிறகு இனியது, இன்னாதது, இவை இரண்டும் கலந்தது என்று மூன்று விதமான வினைப் பயன் உண்டாகிறது. தியாகிகளுக் கோவெனில் ஒரு பொழுதுமில்லை.'

'தியாகிகள்' என்ற வார்த்தையானது ஈண்டு கர்ம பலத்தை அதாவது வினைப்பயனைத் தியாகம் செய்தவர்கள் என்பதைக் குறிக்கிறது. வினைப்பயன் மூன்று விதங்களில் அமைகிறது. 'இஷ்டம், அனிஷ்டம், மிச்ரம்' என்ற பதங்களால் அவை குறிக்கப்படும். அவை இனியது, இன்னாதது, இரண்டும் கலந்தது என்று பொருள்படுகின்றன. விலங்கு இனமாகப் பிறத்தல், புழுப் பூச்சியாகப் பிறத்தல் மற்றும் நரகத்தை அடைதல் போன்றவை அனிஷ்ட கர்ம பலனுகின்றன. சொர்க்கப்ராப்தி மற்றும் தேவ கணத்தைச் சார்தல் இஷ்ட கர்ம பலனுகும். முந்தையது துன்பமயம். பிந்தியது இன்பமயம். பூவுலகத்தில் மக்களாகப் பிறத்தல் இரண்டும் கலந்த கர்ம பலனுகிறது. இதில் இன்ப துன்பங்கள் மாறி மாறி வரும் வினைப்பலனில் பற்று வைப்பவர்களுக்குப் பிறவிகள் திரும்பத் திரும்ப வந்து கொண்டேயிருக்கின்றன. அதனுல் சுக துக்கங்களுக்கு அவர்கள் உட்பட்டாக வேண்டும். மாறுக கர்ம பலனில் பற்று வையாதவர்களுக்குப் பிறப்பும் இல்லை, இறப்பும் இல்லை. அவர்கள் பிறப்பிறப்புச் சக்கரத்திலிருந்து முக்தி அல்லது விடுதலை அடைகிறுர்கள். அவர்களே ஜீவன் முக்தர்கள்.

'இந்தப் பிறவித் துன்பம் போதும், இனிப் பிறவியே வேண்டாம்' என்ற எண்ணம் கோடிக்கணக்கான மக்களுள் யாரோ ஒரு சிலருக்கு ஏற்படலாம். அத்தகையவர்கள் மஹான்களாக மாறியமைகிறுர்கள். தாமரையிலைத் தண்ணீர் போல அவர்கள் யுகத்தில் வாழ்கிறுர்கள். அவர்கள் எதிலும் பற்றற்று வாழ்கிறுர்கள். பற்று இல்லாத காரணத்தினுல் முக்தி நிலை அத்தகையவர்களுக்குத் தானே வந்தமைகிறது.

மரணம் என்பது உறங்குவதற்கு நிகர். உறங்கி விழிப்பதற்கு நிகர் பிறப்பு. உறங்கும் மனிதன் அதே சரீரத்துடன் எழுந்திருக்கிறுன். ஆனுல் செத்தவன் புதிய சரீரத்துடன் உலகில் பிறக்கிறுன். செத்த பிறகு சிவலோகம், வைகுந்தம், நரகம் என்றிருப்போரும் உண்டு. மாறுக இவ்வுலகில் வாழும்போதே நரக வேதனையையும், சொர்க்கத்தையும், அனுபவிப்போரும் உண்டு. நமது மன பரிபாகத்துக்கேற்ப சொர்க்க நரகங்களை நாம் இங்கு அனுபவிக்கிறேம். பஞ்சணை மெத்தையின்மீது உடல் கிடக்கும். ஆனுல் மனமோ எண்ணுதன எல்லாம் எண்ணித் தவிக்கும். அதனுல் முள்ளின்மேல் இருப்பதுபோல் அவன் உணர்வான். மாறுக கரடு முரடான கல்லின்மீது கட்டை போலக் கிடக்கும் கூலியான் சொர்க்கத்திற்கு நிகரான நித்திரை சுகத்தை அனுபவிக்கிறுன்.

தான் செய்யும் கர்மத்திற்குத் தன்னைக் கர்த்தா என்று எவன் நினைக்கின்றுனே அவனுக்குத்தான் இன்ப துன்ப அனுபவங்கள் உண்டாகின்றன. 'நான் கர்த்தா அல்லது செய்பவன் அல்ல. நான் வெறும் கருவி மாத்திரமே, என்னைச் செய்விப்பவன் எனையாளும் ஈசன்' என்று எவன் எண்ணுகின்றுனே, அவன் வினைப் பயன்களான இன்ப துன்பங்களுக்கு ஆளாவதில்லை. ஆயிரமாயிரம் கூலியாட்கள் அணைகட்டும் பணியில் ஈடுபட்டிருப்பினும், அன்றுடம் அவர்களது வேலை முடிந்ததும் அவர்கள் ஆடிக் கொண்டும், பாடிக்கொண்டும் தங்கள் வீடுகளை நோக்கிச் செல்லும் அதே வேலையில் கையில் கரண்டியே பிடிக்காத தலைமை இஞ்ஜினியர் 'அணையில் வெடிப்பு ஏற்பட்டு விடக் கூடாதே, கலவை ஒழுங்காக இருக்க வேண்டுமே.' என்று தமது அறைக்குள் அமர்ந்து கொண்டு சிந்தனையில் மூழ்கி இருக்கிறுர். ஏன்? வேலை செய்யும் கூலியாட்கள் தங்களைக் 'கர்த்தா' என்று நினைப்பதில்லை, தங்களை அவர்கள் வெறும் கருவிகளாக நினைக்கிறுர்கள். ஆனுல் இஞ்ஜினியரோ தம்மைக் 'கர்த்தா' என்று கருதுகிறுர். அதுதான் காரணம்.

அடுத்து ஒரு கேள்வி பிறக்கிறது. உண்மையில் மனிதன் கர்மத்திற்குக் கர்த்தாவா, இல்லையா? விடை அடுத்த சுலோகங்களில் வருகிறது:

பேராசிரியர் டி. கே. நாராயணன் M.Sc., M.Phil.,
ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.

## தி. தி. தேவஸ்தான
## ஸ்ரீ கபிலேஸ்வரசுவாமி கோயில், திருப்பதி.

### தினசரி நிகழ்ச்சி நிரல்

| | | | | |
|---|---|---|---|---|
| 5-00 | முதல் | 5-30 | வரை | சுப்ரபாதம் |
| 5-30 | ,, | 9-30 | ,, | ஸர்வ தரிசனம் |
| 9-30 | ,, | 10-30 | ,, | அபிஷேகம் (ஆர்ஜிதம்) |
| 10-30 | ,, | 10-45 | ,, | முதல் மணி |
| 10-45 | ,, | 11-30 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-30 | ,, | 11-45 | ,, | இரண்டாவது மணி |
| 11-45 | ,, | 4-00 | (மாலை) | ஸர்வ தரிசனம் |
| 4-00 | ,, | 4-30 | வரை | அபிஷேகம் (ஆர்ஜிதம்) |
| 4-30 | ,, | 5-30 | ,, | ஸகஸ்ரநாம அர்ச்சனை (ஆர்ஜிதம்) |
| 5-30 | ,, | 5-45 | ,, | இரவு மணி |
| 5-45 | ,, | 8-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 6-15 | ,, | 6-45 | ,, | தீபாராதனை |
| 8-00 | முதல் | 9-15 | வரை | ஏகாந்த சேவை |

| ஆர்ஜித சேவைகள் | கட்டணம் | நேரம் |
|---|---|---|
| 1. அபிஷேகம் | ரூ. 1/- நபர் ஒருவர்க்கு | காலை 9-30 முதல் 10-00 வரை |
| 2. ஸகஸ்ரநாமா அர்ச்சனை | ரூ. 1/- நபர் ஒருவர்க்கு | மாலை 5-00 முதல் 6-00 வரை |

### பிரஸாத கட்டண விவரங்கள்

| | | |
|---|---|---|
| 1) | புளியோதரை | ரூ. 100-00 |
| 2) | பொங்கல் | ரூ. 110-00 |
| 3) | தத்யோதனம் | ரூ. 75-00 |
| 4) | சர்க்கரைப் பொங்கல் | ரூ. 135-00 |
| 5) | தோசை (படி) | ரூ. 300-00 |
| 6) | ஸீரா | ரூ. 300-00 |
| 7) | கேஸரிபாத் | ரூ. 180-00 |

பஞ்சைதானி மஹாபாஹோ
காரணுனி நிபோத மே |
ஸாங்க்யே க்ருதாந்தே ப்ரோக்தானி
ஸித்தயே ஸர்வகர்மணும் || (18-13)

'பெருந்தோளுடையவனே! கர்மத்தின் முடிவு காட்டும் ஸாங்க்ய சாஸ்திரத்தில் சகல கர்மங்களின் சித்திக்கென்று பகரப்பட்டுள்ள இந்த ஐந்து காரணங்களேயும் என்னிடமிருந்து அறிந்து கொள்வாயாக.'

பகவத் கீதையில் இரண்டாவது அத்தியாயம் ஸாங்க்ய யோகம் எனப்படுகிறது. இந்த சுலோகத்திலும் ஸாங்க்ய சாஸ்திரம் என்ற வார்த்தை வருகிறது. ஈண்டு ஸாங்க்ய சாஸ்திரம் என்பது வேதாந்த சாஸ்திரத்தைக் குறிக்கிறது. கபில முனிவர் இயற்றிய ஸாங்க்ய தரிசனம் வேறு. அது ஆறு சாஸ்திரங்களில் நான்காவது இடத்தைப் பெறும் ஒன்றுக அமைகிறது. இந்த இயற்கையின் அமைப்பைப் பற்றி அது விரிவாக ஆராய்கிறது. ஆனுல் வேதாந்த சாஸ்திரத்தின்படி கர்மம் செய்வது அனைத்தும் இறுதியில் கர்மாதீத அல்லது கர்மம் கடந்த நிலையில் போய் முடிய வேண்டும். ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெறப் போகும் நோயாளியின் குறிக்கோள் ஆஸ்பத்திரியிலேயே நிரந்தரமாகத் தங்கி விடுவதல்ல. சிகிச்சை முடியும் வரை அவன் அங்கிருந்தாக வேண்டும். சிகிச்சை முடிந்ததும் அங்கிருந்து வெளியேறியாக வேண்டும். கல்வி கற்க வேண்டி பள்ளி செல்லும் மாணவனும் கல்வி கற்கும் வரை பள்ளியில் இருந்துவிட்டு, கல்வி கற்றதும் பள்ளியை விட்டு வெளியேறியாக வேண்டும். கர்மத்திலே என்றென்றும் கட்டுண்டிருப்பது என்பது வேதாந்தியின் குறிக்கோள் அல்ல. கர்மம் கடந்த பெருநிலைக்குச் செல்வதுவே அவனது குறிக்கோள். கர்மம் கடந்த நிலை என்பது ஞான நிலையாகும். 'செயல்மூலம் செயல் கடந்த நிலை' என்பது கர்மயோகியின் இலட்சியமாகும். குருதேவர் ஸ்ரீ சுவாமி சிவானந்தர், ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் மற்றும் சுவாமி விவேகானந்தர் போன்ற மகான்களின் வாழ்வு புகட்டும் பாடமும் இதுவேயாகும். இந்த உலகம் கர்மமயமானது. அதில் இருக்கும் பொழுதே கர்மாதீதப் பெருநிலையை அடைய முயல வேண்டும். இப்பிறவி தப்பினுல் எப்பிறவி வாய்க்குமோ? யாரறிவார்? எனவே பெறற்கரிய வாய்ப்பினைப் பெற்ற பின்பு அதைக் களியாட்டத்திலும், வீண் வழிகளிலும் விரயமாக்குதல் தகாது.

கர்மத்திற்கு எது எப்படிக் காரணமாகிறது என்பதன் விளக்கம் அடுத்து வருகிறது.

அதிஷ்டானம் ததா கர்த்தா
கரணம் ச ப்ருதக்விதம் |
விவிதாஸ் ச ப்ருதக்சேஷ்டா
தைவம் சைவாத்ர பஞ்சமம் || (18-14)

'இருப்பிடமாகிய உடல், கர்த்தா, பலவகையான இந்திரியங்கள், வெவ்வேறு செயல்கள், இவை தவிர ஐந்தாவதாக தெய்வம் ஆகிய இவ்வைந்தும் காரணங்களாகின்றன'

இந்த நமது உடல் ஒரு இயந்திரத்திற்கு நிகர். மற்ற இயந்திரங்களை நாம் படைக்கிறோம். நமது உடலாகிய இந்த இயந்திரத்தை இறைவன் படைத்தார்.

ஒரு போயிங் விமானத்தை எடுத்துக் கொள்வோம். அந்த விமானம் அழகாக விண்ணில் பறந்து செல்கிறது. அதன் இயக்கத்திற்கு எவை எவை காரணம் என்று சற்றே ஆராய்வோமா? அந்த ஆராய்ச்சி நமது உடலைப் பற்றிய உண்மையையும் நமக்குஎடுத்துப்புகட்டும். (தொடரும்)

# வள்ளலார் - ஓர் ஒளி விளக்கு

வள்ளலார் திக்குகள் எத்தனை அத்தனை சுற்றியும் தப்பிதம் இல்லாக் கொள்கையினைத் தக்க சமயந்தனிற் மிக்க அமைதியொடு தாரணி வாழ்ந்திடத் தந்தவர்; மக்களினத்துறும் சிக்கலறுப்பது மட்டுமே தனக்கு வாழ்வெனக் கொண்டவர்; அருட்பெருஞ் சோதி தனிப்பெருங்கருணை எனும் இறையையும் இறைநெறியையும் கண்டவர்.

அவர் ஓர் ஒளி விளக்கு. விளக்கு எனும்பொழுது - அது விளக்கம் அளிக்கவல்லதாக இருக்க வேண்டும். அது முதலில் தன்னை விளங்கிக் கொள்ள வேண்டும். பிறகு, தன்னைச் சுற்றிச் சூழ்ந்துள்ளவற்றை விளங்கிக் கொள்ள வேண்டும்; விளங்க வைக்க வேண்டும். அடுத்து, பிறவற்றை விளங்க வைக்க வேண்டும். அது முதலில் தன்னிடத்து உள்ள இருளை அகற்றிக் கொள்ள வேண்டும். பிறகு, தன்னைச் சுற்றிச் சூழ்ந்துள்ளவற்றினின்றும், பிறவற்றினின்றும் இருளை அகற்ற வேண்டும். ஒளி விளக்கு எனும்பொழுது என்றைக்கும் எப்பொழுதும் எந்நிலையிலும் துலக்கமுற ஒளிர்வதாக இருக்க வேண்டும். ஓர் ஒளி விளக்கு எனும்பொழுது என்றைக்கும் எப்பொழுதும் எந்நிலையிலும் துலக்கமுற ஒளிர்வதோடு மட்டும் அமையாது தனக்கு ஈடு இணையற்ற - ஒப்புயர்வற்ற - நிகரற்ற நிலையான ஒரே ஒரு விளக்காகவும் விளங்க வேண்டும்.

மேற்கண்ட இந்நிலையில் வள்ளலார் விளக்காக இருந்து-ஒளி விளக்காக அமைந்து-ஓர் ஒளி விளக்காக அற்றை நாள் முதல் இற்றை நாள் வரை விளங்கிக் கொண்டார். அடுத்து, தான் விளங்கிக் கொண்டதைப் பிறருக்கு விளங்க வைத்தார்.

வள்ளலார் தனிமனித நிலை கடந்து சமுதாய நிலை கடந்து - முடிவில் பேரின்பப் பெருநிலையை - இறை நிலையை எடுத்தியம்பிய ஓர் ஒளி விளக்காவர்.

"அகத்தே கறுத்துப் புறத்து வெளுத்திருந்த உலகோர் அனைவரையும் சகத்தே திருத்தி சன்மார்க்க சங்கத் தடைவித்திட அவரும் இகத்தே பரத்தைப் பெற்று மகிழ்ந் திடுதற் கென்றே இந்த உகத்தே வருவிக்க உற்ற" ஓர் ஒளிவிளக்கு வள்ளலார்.

உலகில் எத்தனையோ வள்ளல்கள் வாழ்ந்தார்கள். முல்லைக்குத் தேர் கொடுத்தான் பாரி. மயிலுக்குப் போர்வை அளித்தான் பேகன். இன்னும் இவர் போன்ற வள்ளல்கள் எத்தனையோ பேர்! ஆயினும் இவர்க்கெல்லாம் இல்லாத 'ஆர்' விகுதி தனிச்சிறப்பு இராமலிங்க அடிகட்கே உண்டு. அவர் மட்டுமே 'வள்ளலார்' என்றழைக்கப் பெறுகிறார்.

**வள்ளலார் காலம் :**

சமுதாயம் சாதிச் சேற்றிலும், மதச்சகதியிலும், கோத்திரப் படுகுழியிலும், சாத்திரப் புதை குழியிலும் சிக்குண்டு, சிதைவுற்றிருந்த காலத்தில் தோன்றினார் வள்ளலார். உலக உயிர்களுக்கிடையே ஆன்ம நேய ஒருமைப்பாடு இல்லாத காலத்தில் தோன்றிய வள்ளலார் இக்குறை யாவற்றையும் அகற்ற முடிவு கொண்டார். அவ்வகையில் முதற்பணியாக எச்சாதியினருக்கும் எச்சமயத்தவருக்கும் எம்மதத்தவருக்கும் எவ்வினத்தவருக்கும் பொதுவான நிலையில் 'சமரச சன்மார்க்க சங்கம்' என்னும் அமைப்பை 1865ஆம் ஆண்டு நிறுவினார்.

இவருக்கு முன் மற்றையோரெல்லாம் மடம் என்ற பெயரிலேயே செயல்பட்டிருந்தனர். ஆயின் இவர் மட்டுமே 'சங்கம்' எனச் சமயத் துறையினின்று செயல்பட்டு வழிகாட்டி ஆயினர்.

**வள்ளலார் காட்டிய இறை :**

சமரச சன்மார்க்க சங்கத்தின் வாயிலாக வள்ளலார் சாதி-சமயங்களில், மத-இன பேதங்களில், கோத்திர-குல வாதச் சண்டைகளில் வீழ்ந்து, ஆழ்ந்து, தோய்ந்து, மாய்ந்து கொண்டிருந்த மக்களினத்தை உண்மை எனும் கரை கொணர்ந்து ஒன்றே இறை; அது உருவமில்லாதது; சோதியாய் ஒளிர்வது என்ற புது உண்மையைப் புதுக்கினர்.

இறை உருவினன் என்றும், அருவினன் என்றும், உரு அருவினன் என்றும், இருவர் என்றும், மூவர் என்றும், ஐவர் என்றும் மக்கள் பிதற்றித் திரிந்த நேரத்தில் வள்ளலார் ஐயகோ ஓர் உடலுக்கு இரண்டு மூன்று உயிர் இருக்கக் கூடுமோ? அதுபோல, இந்த உலகாகிய உடலுக்கு இறையாகிய உயிர் ஒன்றுதான் இருக்க முடியும் அன்றோ? உலகீர்! இவ்வுண்மை அறியாது அழிந்துபடுகின்றீரே என்று அரற்றி உளம்நொந்தார் வள்ளலார்.

வள்ளலார் இறையைச் சோதி வடிவமாகவே கண்டார்; கொண்டார். இது தமிழ்ப் பரம்பரைக்குப் புதிய சிந்தனை-நெறி அல்ல எனினும்

**திரு. கோவி. இராசகோபால்,**
**எம்.ஏ., எம்.ஃபில்.,**
**திருப்பதி.**

புதிய பாரம்பரிய உருவாக்கம் என லாம்.

அவர்காட்டிய இறை 'அருட் பெருஞ்சோதி' ஆகும். அவ்வருட் பெருஞ்சோதியை அடைதற்குரிய நெறி 'தனிப்பெருங் கருணை' ஆகும்.

**வள்ளலார் கண்ட சமயமும் சமுதாயமும்:**

வள்ளலார் "அப்பா நான் வேண்டு தல் கேட்டருள் புரிதல் வேண்டும்; ஆருயிர்க் கெல்லாம் அன்பு செயல் வேண்டும்; எனையடைந்தார் சுகம் வாய்ந்திடல் வேண்டும்; உள்நாடி உயிர்கள் உறும் துயர் தவிர்த்தல் வேண்டும்" என்று பிறரின் நலனுக் காக-பிறவற்றின் நலனுக்காக இறையை வேண்டியவர். அப்பெருந் தகை "எத்துணையும் பேதமுறாது எவ் வுயிரும் தம்முயிர் போல் எண்ணி உள்ளே ஒத்துரிமை உடையவராய் உவக்கின்ற உள்ளங்களை"த் தேடினார்.

கூறுகின்ற சமயமெல்லாம் மதங் களெல்லாம் பிடித்துக் கூவிக் கொண்டு, வீணே நீருகி, மண்ணுகி நாறிக் கொண்டிருந்த மக்களை நோக்கி, ஐயகோ! என்னருமை மக்களே! பெறுதற்கரிய மானுடப் பிறப்பைப் பெற்றவர்களே! பரந்து விரிந்த இவ்வுலகில் சிறந்து வாழ வேண்டிய நீங்கள், இழிந்து வாழ் கின்றீரே! நீங்கள் சாதியின் பெய ராலும், சமயங்களின் பெயராலும், கள்ளமுறும் சமய நெறிகளின் பெய ராலும், வீண் வரட்டு வந்தனை வழி முறைகளின் பெயராலும் வழிதவறிச் செல்கின்றீரே! அந்தோ! இவை யாவும் பேய்ப்பிடித்த பிச்சுப்பிள்ளை விளையாட்டு என்பதை உணரும் வழி யறியீரே! என்று வருந்தினார் வள்ள லார்.

வருந்தியதோடு அமைந்துவிடாது புது வழியும் காட்டினார் வள்ளலார். இறையை வணங்குவதில் வீண் ஆர வாரம் கூடாதென்றார்; 'ஞான சபை' என்ற அமைப்பை நிறுவினார்; தூப, தீப ஆராதனைகள், தேங்காய், பழம் முதலிய நைவேத்தியங்கள், மேள வாத்தியங்கள் இவையெல்லாம் ஞான சபைக்குப் புறம்பானவை என அறி வித்தார். யாவரும் சபை வாயிலின் முன் 'மெல்லெனத் துதித்தல் வேண் டும்' என்றார்.

**சீவகாருண்ய ஒழுக்கம்:**

வள்ளலார் வகுத்தளித்த கொள் கைகளுள் தனிப்பெருங்கருணையை அடிப்படையாகக் கொண்டெழுந்தது சீவகாருண்ய ஒழுக்கமாகும்.

"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிருந் தொழும்"
அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொரு வன்
பெற்றான் பொருள்வைப் புழி"

என்ற வள்ளுவ நாயனரின் இரு வாசகங்களின் மேலெழுந்த சாசனமே சீவகாருண்ய ஒழுக்கமாகும்.

அனைத்து உயிர்கட்கும் இரங்கும் தன்மையே இறை விரும்பும் தன்மை யாகும். அதுவே தனிப்பெருங்கருணை ஆகும். மண்ணோடு மண்ணாய் அழிந்து போகக் கூடிய இவ்வுடலை வளர்ப் பதற்கு ஒன்றும் அறியாத ஏழைச் சீவன்களை-ஆடுகளை மாடுகளை-கோழி களை-பன்றிகளைக் கொன்று குவித்து, தின்று தீர்ப்பது நியாயமல்ல என்று நிறுவினார் வள்ளலார். ஆதலால், அவையாவும் நமமுயிர் போல்வனவே; அவையும் இரங்கத் தக்கனவே என் பதை எடுத்தியம்பினார் வள்ளலார்.

உயிர்கள் இறையைப் பற்றிச் சிந் திக்க முனையும் முன் அவற்றின் வயிற்றுப்பசி தீர்க்க வேண்டியது முதற்பணி என்று கண்டார் வள்ள லார்.

"வாடிய பயிரைக் கண்டபோதெல் லாம் வாடிய" அருளுள்ளம் கொண்ட வள்ளலார், "பசியினல் இளைத்தே வீடுதோறும் இரந்தும் பசியறாது அயர்ந்த வெற்றரைக் கண்டுளம்" பதைத்தார்.

"மண்ணுலகதிலே உயிர்கள் தாம் வருந்தும் வருத்தத்தை ஒரு சிறி தெனினும் கண்ணுறப் பார்த்தும் செவியுறக் கேட்டும் கணமும் நான் சகித்திட மாட்டேன்" என்று அனைத்து உயிர்கட்காக இரங்கிய வள்ளலார், "பட்டினி உற்றார் பசித்தனர் களை யால் பரதவிக்கின்றனர் என்றே, ஓட் டிய பிறராற் கேட்ட போதெல்லாம் உளம்பகீரென நடுக்குற்றவர்",

**வள்ளலார்—ஓர் ஒளி விளக்கு:**

"உற்றவர் நாட்டவர் ஊரார்-இவருக்கு
உண்மைகள்கூறி இனியன செய்தல்
நற்றவம் ஆவது கண்டோம்-இதில்
நல்லபெருந்தவம் யாதொன்றும் இல்லை
பக்கத் திருப்பவர் துன்பம்-தன்னைப்
பார்க்கப் பொறுதவன் புண்ணிய மூர்த்தி
ஒக்கத் திருத்தி உலகோர்-நலம்
உற்றிடும் வண்ணம் உழைப்பவன் யோகி"

என்ற மகாகவி பாரதியாரின் உள்ளத் திற்கு உடம்பெடுத்த ஓர் ஒளி விளக்கு வள்ளலார்; அவர் அனைத்து உயிர்கட்கும் இரங்கும் புதுநெறி காட்டிய ஓர் ஒளி விளக்கு; சாதி-சமயங்கடந்த, உருவமிலாத ஓர் இறையைக் காட்டிய ஓர் ஒளி விளக்கு; தாரணி வாழ்ந்திட, தமிழ்மண் உயர்ந்திட தனிவழி காட்டிய ஓர் ஒளி விளக்கு; அருட்பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை எனும் ஒரு வழி காட்டிய ஓர்ஒளி விளக்கு.



# ஸ்ரீ வேதாந்த தேசிகர் தரிசனம்

திருமலை வேங்கடாசலபதி பகவானின் கண்டாவதாரம் (The Celestial hand bell) என்று தோத்திரம் செய்யப்படும் ஸ்ரீ வேதாந்த தேசிகர், ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தம் உலகில் வேரூன்றிப் பரவக் காரணமானவர். இவர் ஆசார்யப் பரம்பரையைத் தழுவியவர்; ஸ்ரீவைஷ்ணவம் தழைத்தோங்கக் காரணமாயிருந்த முதன்மை ஆசாரியர் ஸ்ரீ இராமனுஜரின் சீடரும் ஆவார். ஸ்ரீவேதாந்த தேசிகர் சுமார் 717 ஆண்டுகளுக்கு முன் இப்புவியில் அவதாரம் செய்தனர்.

அவருடைய 718 ஆவது அவதார நாளை அக்டோபர் 16-ம் தேதி வெகு விமரிசையாக சென்னையில் கொண்டாடினோம் என்பது அனைவரும் அறிந்ததே.

அவர்தம் பெற்றோர் அனந்தஸூரிக்கும், தோத்தாரம்மாளுக்கும் ஒரே பிள்ளையாக அவதாரம் செய்தார். கி. பி. 1268ம் ஆண்டு, புரட்டாசித் திங்கள் காஞ்சீபுரத்திற்கு அருகில் உள்ள தூப்புல் என்னும் கிராமத்தில், திருவோண நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் இந்த ஆசாரியர் அவதாரம் செய்தார்.

ஏழுமலைகளின் நாதனான ஸ்ரீவேங்கடேசப் பெருமாள் அனுக்கிரஹத்தால் இந்தக் குழந்தை ஜனித்ததால், அவர்தம் பெற்றோர் வேங்கடேசன் என்ற திருநாமம் சூட்டினர். பகவான் அம்சமான "கண்டை"யின் அவதாரம் என்று போற்றப்படுபவர் ஸ்ரீ வேதாந்த தேசிகர் ஆவார். அவர் தம் தரிசனம் காண, மீண்டும் ஒரு முறை அவர் தொடங்கிய பணிகளை நினைவு கூர்வதாக அமைந்துள்ள இக் கட்டுரையைக் கவனிப்போம்.

வேங்கடேசன் தனது ஐந்தாவது வயதில் பள்ளிக்கு அனுப்பப்பட்டார். அவர்தம் மாமாவாகிய அப்புள்ளாரிடமிருந்து தெய்வ வழிபாட்டுச் சம்பந்தமான அனைத்து பழக்க வழக்கங்களையும் கற்றுணர்ந்தார். வேத சாஸ்திர, இதிகாஸ புராணங்களை தமிழிலும், சமஸ்கிருதத்திலும் சிறந்த ஆசாரியர்களிடமிருந்து கற்றுத் தேர்ச்சி பெற்றார். தனது இருபதாவது வயதிற்குள்ளாகவே கல்வி கேள்விகளிலும், சகல சாஸ்திரங்களையும் கற்றுத் தெளிந்ததோடு, மிகவும் போற்றுதற்குரிய "ஸ்ரீ பாஷ்யம்" என்ற நூலையும் கற்று மிகுந்த தேர்ச்சியடைந்தார். குழந்தைப் பருவத்திலேயே தர்கம், மீமாம்ஸம், வியாகரணம் போன்றவற்றில் மிகுந்த தேர்ச்சி பெற்றிருந்தமையால், அவரை அனைவரும் பெரிய மகான் என்றே போற்றி வந்தனர்.

வேங்கடேச பகவானின் திருவருளால் மகோன்னதமான தெய்வீகத் தன்மை பெற விழைந்தார். இதற்காக அவர் திருவஹீந்திபுரத்தில் உள்ள ஔஷதகிரி என்னும் மலையில் கடும் தவம் மேற்கொண்டார். (திருவஹீந்தி புரமென்பது தென் ஆற்காடு மாவட்டத்தில் உள்ளது). 'ஔஷதகிரி' தன் பெயருக்கு ஏற்றார் போல், ஆயுர்வேத, வியாதி தீர்க்கும் மூலிகைகள் மிகுந்து வளர்ந்துள்ள ஒரு சிறிய மலையாகும். அங்கு சாஷாத் பகவானின் (திருமாலின்) வாஹனமாகிய ஸ்ரீ கருட பகவானை பிரத்யக்ஷமாக இவர்முன் தோன்றி, முக்தி நிலையை அடையும் பொருட்டு, ஸ்ரீ ஹயக்ரீவ மஹா மந்திரத்தை உபதேசித்து, அதனைத் தோத்திரம் செய்யுமாறு அருள்கூறி மறைந்தார். மேலும், அவர் (கருட பகவான்) ஸ்ரீ ஹயக்ரீவரின் உருவச்சிலை ஒன்றையும் அன்பளிப்பாக வழங்கிச் சென்றார்.

இதனைத் தொடர்ந்து, வேங்கடேசன், ஸ்ரீ ஹயக்ரீவப் பெருமாளை நோக்கி கடும்தவம் மேற்கொண்டார். ஸ்ரீ ஹயக்ரீவரின் திருவளால் சகல சாஸ்திரங்களையும், மேலும் அனைத்து ஞானங்களையும் பெற்றவராகினர்.

இதனாலன்றோ இவரை 'சர்வ தந்த்ர ஸ்வதந்தரர்' என்றும், 'சர்வக்ஞர்' என்றும் போற்றினர். இவர் தம் முதல் ஸ்தோத்திரம் ஸ்ரீ ஹயக்ரீவ ஸ்தோத்திரமாகும். தான் அடைந்த அபரிமிதமான ஞானத்தின் காரணமாகவும், இதே ஞானத்தை புவியிலுள்ளோர் அனைவரும் அடைய வழிவகை செய்ய ஸ்ரீ ஹயக்ரீவ ஸ்தோத்திரம் என்பது இன்றும் அநேக இல்லங்களில் தொன்று தொட்டு ஒலித்துவரும் மிகச் சிறந்த ஸ்தோத்திரம் ஆகும். இன்றும், மாணவர்கள் தன் நித்தியப் படிப்பை ஆரம்பிக்குமுன் ஸ்ரீ ஹயக்ரீவத் தோத்திரம் சொல்வதை நாம் காணலாம். ஏனெனில், ஞானத்தின் இருப்பிடம் ஸ்ரீ ஹயக்ரீவர் என்பது தொன்று தொட்டு வழங்கி வருகிறது. அதன்பின், வேங்கடேசன், ஸ்ரீ கருட பகவான் கொடுத்த ஸ்ரீ ஹயக்ரீவப் பெருமாள் உருவச்சிலையை தான் எங்கு சென்றாலும், கூடவே அதனை எடுத்துச் செல்லும் பழக்கம் கொண்டவரானார்.

திரு. A. N. மாதவன். B.Sc., A.C.A.
சென்னை.

வேதாந்த தேசிகர் ஔஷதகிரியிலிருந்து, காஞ்சிபுரம் வந்து கொண்டிருக்கும் பொழுது, ஒரு பெரிய மலைப்பாம்பு ஒன்று வழியைத் தடுத்து நின்றது. அன்று இரவு அவர் 'பெண்ணை' ஆற்றின் கரையில் தங்க வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது.

# பாவை நோன்பு

பண்டைத் தமிழர்கள் குறிப்பாக பருவப் பெண்கள் மார்கழி மாதத்தில் ஆற்றுக்குச் சென்று நீராடி, ஆற்று மணலில் பாவைஒன்றினைப் பிடித்து, அதை இறைவனாகப் பாவித்து வழிபடும் முறைக்கு "பாவை நோன்பு" என்று பெயர்.

அவர்கள் அவ்வாறு வழிபடுங்கால் மழை நன்றாகப் பெய்து நாடு செழிக்க வேண்டுமென்றும், தங்களுக்கு நல்ல கணவன் கிடைக்கப்பெற வேண்டுமென்றும் வழிபடுவது வழக்கம்.

சங்க நூல்கள் மேற்படி நோன்பை, கன்னிப் பெண்கள் மேற்கொண்டதாக சான்றுகள் பகர்கின்றன. உமாதேவியார் பாவை நோன்பிருந்து சிவபெருமானை அடையப் பெற்றார் என்கின்ற வரலாறும் உண்டு.

பாவை நோன்பை அடிப்படையாக்க் கொண்டு ஸ்ரீ ஆண்டாள் அருளிய முப்பது பாடல்களைக் கொண்டுள்ள தொகுப்பு நூல் "திருப்பாவை" என அழைக்கப்படுகின்றது. திருப்பாவையில் ஸ்ரீ ஆண்டாள் பரந்தாமனை வழிபட பாவை நோன்பிருக்க மற்ற பெண்களை அழைத்து, பாவை நோன்பின் முறைகளையும், பலன்களையும் உலகத்தாருக்கு,

"மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்,
நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்" என ஆரம்பித்து

"செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமால்
எங்கும் திருவருள் பெற்று இன்புறுவ ரெம்பாவாய்"

என முடித்து திருமாலின் பெருமைகளை மிகச் சிறப்பாக விளக்குகின்றார்.

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் திருவண்ணாமலையில் சிவசக்தியை வியந்து பாராட்டி, பாவை நோன்பிருக்க வேண்டி அருளியது "திருவெம்பாவை" என்னும் நூலாகும். இருபது பாசுரங்களைக் கொண்டுள்ளது திருவெம்பாவை ஆகும். அந்நூலை மாணிக்க வாசக சுவாமிகள்,

"ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள்தடங்கண்
மாதே! வளருதியோ" என ஆரம்பித்து

"போற்றியாம் மார்கழிநீர் ஆடு ஏலோர் எம்பாவாய்"

என முடித்து மார்கழிப் பாவைநோன்பின் பெருமையைச் சிறப்பிக்கின்றார்.

மேற்சொன்ன திருப்பாவை மற்றும் திருவெம்பாவை என்னும் இரண்டு நூல்களும் தமிழ்மொழி உள்ளவரை மறக்க முடியாத தேன் சொட்டும் இன்சுவை நூல்களாகும். மேற்படி இரு நூல்களைப் படிப்பது தமிழ் அறிந்த ஒவ்வொருவரின் தலையாய கடமையுமாகும்.

மேலும் மேற்படி இரு நூல்களும் சிறப்பிக்கும் பாவை நோன்பினை பருவப் பெண்கள் கடைப்பிடித்து விஷ்ணுவையும், சிவனையும் வழிபட்டுச் சீரும், சிறப்பும் அடைவார்களாக.

முடிகை முத்து

அன்று அவரது கனவில் ஸ்ரீ தேவநாதப் பெருமாள் தோன்றி, இவ்வுலகம் உய்ய வேத சாஸ்திரங்களின் உள்ளார்த்தத்தை உலகுக்கு போதிக்குமாறு கட்டளையிட்டு மறைந்தார். தான் அவ்வாறே ஸ்ரீ தேவநாதப் பெருமாளின் கட்டளைப்படி உலகுக்கு வேத சாஸ்திரங்களை உபதேசிக்க உறுதி பூண்டார்.

மிகச் சிறந்த ஆசாரியர்களுள் ஒருவரான ஸ்ரீ வேதாந்த தேசிகர் தமிழ், சம்ஸ்கிருதம், பிராகிருதம் ஆகிய மொழிகளில் பலப்பல புத்தகங்களையும், பாஷ்யங்களையும் இயற்றியுள்ளார். அவரது நடை தெள்ளத் தெளிவாகவும், மிகவும் சுலபமாகப் புரிந்து கொள்ளும் வகையிலும் அமைந்திருப்பது போற்றுதற்குரிய ஒன்றாகும்.

நம் நாட்டில் மட்டுமின்றி, வெளிநாட்டு அறிஞர்களும் அவரது படைப்புக்களைப் போற்றியுள்ளனர். "The logic of his arguments bore ample testimony of his eloquence" என்று அவர்கள் போற்றுகிறார்கள். அவரது நடை தமிழும், சம்ஸ்கிருதமும்கலந்த மணிப்பிரவாள நடையாகும். இந்த மணிப்பிரவாள நடையை அவரது அநேகப் படைப்புக்களில் காணலாம். இது வடக்கு, தெற்கு ஆகிய இரு பிரிவினர்க்கும் ஏற்ற தொன்றாகும்.

ஸ்ரீ வேதாந்த தேசிகர் 32 தோத்திரங்களும், 8 காவியங்களும், 24 அனுஷ்டான சாஸ்திரங்களும், 32 ரஹஸ்யங்களும், 24 பிரபந்தங்களும், "பகவத் விஷயம்" ஆகிய 121 படைப்புக்களை சுமார் 4 மொழிகளில் இயற்றியுள்ளார். அவர் பல சாதனைகளை நிகழ்த்தியவராவார். கொத்தனார் ஒருவர் செய்த குறும்பின் காரணமாக, தானே, தனது இரு கரங்களாலும் ஒரு கிணற்றை நிர்மாணம் செய்தார். அது இன்றும் அவரது ஊராகிய "தூப்புல்" என்னும் கிராமத்தில் காட்சியளிக்கிறது. இன்றும்

இந்தக் கிணற்றை பாவம் தீர்க்கும் புண்ணிய ஜல ஸ்தானமாகப் போற்றி வருகின்றனர்; இதில் ஸ்நானம் செய்தவர்கள் தங்கள் பாவத்தைத் தொலைத்து விடுகிறுர்கள் என்று இன்றும் நம்பி வருகிறுர்கள்.

ஒரு முறை வேதாந்த தேசிகர் ஸ்ரீ ஹயக்ரீவப் பெருமாளுக்கு நைவேத்தியம் செய்ய உணவில்லாமல் தவித்தார். அதனுல் ஜலம் மட்டுமே அவரால் அளிக்க முடிந்தது. அப்போது, ஒரு வெண் குதிரை அங்குக் கொட்டி வைத்திருந்த ஒரு விவசாயியின் தானியங்களைத் தின்று கொண்டிருந்தது. இதனுல் ஏற்பட்ட அமளியை ஸ்ரீ வேதாந்த தேசிகர் கண்ணுற்ருர். உடனே, அவர் அருகில் இருந்தவர்களிடம் சிறிது பாலமுது கேட்டார்; அதனை அக்குதிரையின்முன் நைவேத்தியமாகப் படைத்தார். அதன்பின் அவ்வெண் குதிரை மறைந்து சென்றது. இதனுல் அவர்தம் பெருமை எல்லோர்க்கும் புரிந்தது.

மேலும், இவரது ஞானத்தைக் கண்டும், தெய்வீகத் தன்மை கொண்டவர் என்பதைக் குறித்தும் மக்கள் பொருமை கொண்டனர். அதனுல், அவரது உயிருக்கு முடிவுகட்ட நினைத்தனர். இதனுல் ஏவப்பட்ட ஒரு பாம்பாட்டி அவர் போகும் வழியில், அவர் முன்பாக அநேக விஷப்பாம்புகளை போட்டு, அவர்மீது ஏவினுன். உடனே ஸ்ரீ வேதாந்த தேசிகர் சாக்ஷாத் கருட பகவான் மீது "கருட தண்டகம்", "கருட பஞ்சாஸத்" ஆகிய தோத்திரப் பாடல்களைப் பாடினுர். உடனடியாக, கருட பகவான் அங்குத் தோன்றி, அனைத்துப் பாம்புகளையும் கொத்திச் சென்ருர். இதனுலன்ரோ அவரை "கவிதார்க்கிக சிம்ஹம்" என்று வழங்கினுர்கள். அவரது ஞானமும், புத்தி கூர்மையும், எதிரிகளை வெல்லும் திறமையும், சிங்கம் போன்ற அஞ்சாத நெஞ்சமும் கொண்ட அவருக்கு இந்தப் பெயர் பொருத்தமானதொன்ருகும்!

## நேற்று, இன்று?
# பிரஜைகளின் ஜனன, மரண நாட்கணக்கு

சூரியன் உதயமானதிலிருந்து அஸ்தமித்து, மறுதினம் சூரியன் உதயமாகும் வரை ஒரு நாள் என்று சிலர் கொள்கையளவில் கணக்கு வைத்துக் கொண்டுள்ளனர். ஆங்கிலேயர் வகுத்த முறைப்படி நள்ளிரவிலிருந்து மறு தினம் நள்ளிரவு வரை ஒரு தினமென நடைமுறையுண்டு. அப்போது நிசியில் ஜனனமாகும்/மரிக்கும் பிரஜையின் ஜனன/மரண தினத்தைக் கண்டறிந்து கொள்வதில் கருத்து வேற்றுமைகளால் சிரமப்படுகின்ருேம்.

இதனை ஐயப்பாடின்றித் தெரிந்துகொள்ள, தர்ம சாஸ்திரம்- ஆசௌச காண்டம் - தெளிவாக விளக்குகின்றது:

ஜனன, மரணம், ரஜஸ் இவைகள் சூர்யோதயத்துக்கு 11¼ நாழிகைக்கு முன் ஏற்பட்டால் முதல்நாள் முதற்கொண்டு கணக்காகும். பிறகு சம்பவித்தால் மறுநாள் கணக்கென கொள்ள வேண்டும். அதாவது 1½ மணிக்குள் ஜனனமோ மரணமோ முந்தைய நாளில் ஏற்பட்டதாகக் கொள்ள வேண்டும். பின்னர் நேரின் மறுநாள் கணக்காம்.

துண்டீர மண்டல பெரியவர்கள் தீர்மானம் செய்தபடி ஜனன- மரண நாள் கணக்கு:

இரண்டு ஸந்தியா காலங்களைத் தள்ளி - அதாவது 3¾ நாழிகை பூர்வ ஸந்தியா, 3¾ நாழிகை அமர ஸந்தியா - ஆக 7½ நாழிகை (அல்லது 3 மணி நேரம்) போக மீதி 22½ நாழிகைகளை மூன்ருக வகுத்து, முன்னிரண்டு பாகங்களில் அடங்கும் 15 நாழிகைகளுக்குள் ஜனனம்/மரணம் சம்பவித்தால் முதல்நாள் கணக்கென்றும், அதன்பின் - அதாவது 1½ மணிக்கு மேல் நிகழ்ந்தால் மறுநாள் கணக்கென்றும் வகுத்துள்ளனர்.

"சுருங்கக் கூறின், 3¾ நாழிகையாவது 1½ மணி நேரமாகும். ஆகவே, இரவு 7½ மணிக்கு மேல் விடியற்காலை 4½ மணிக்குள்ளாகும் 9 மணி நேரத்தை மூன்ருகப் பிரித்துக்கொண்டு கணக்கிடல் வேண்டுமென்பதே" என்று குடந்தை அத்வைத ஸபை பிரம்ம ஸ்ரீ மஞ்சக்குடி வெங்கடராம சாஸ்திரிகள் விளங்கக் கூறினுர்கள்.

— "மயூரப்ரியா".

அதன்பிறகு அவர் திருப்பதி, ஸ்ரீரங்கம் போன்ற பல திவ்விய க்ஷேத்திரங்களையும், அங்கு இருக்கும் கோயில்களையும் தரிசனம் செய்தார். அவ்வாறு செய்கையில், அந்தந்த க்ஷேத்திரங்களைப் பற்றியும், ஸ்வாமியைப் பற்றியும் தோத்திரங்களும், பிரபந்தங்களும் இயற்றினுர்.

பிறகு, அநேக வருடங்கள் ஸ்ரீரங்கப் பட்டணத்திலேயே தங்கியிருந்து "ஸ்ரீ பாஷ்யம்" போன்றவற்றிற்கும், மற்றும் வேதத்திற்கும் எளிய முறையில் விரிவுரைகளை எழுதினுர். ஸ்ரீரங்கநாதரும்,ரங்கநாயகித் தாயாரும், இவர்தம் படைப்புக்களில் மகிழ்ந்து, இவருக்கு "வேதாந்தாசாரியர்" என்றும் "சர்வதந்த்ர ஸ்வதந்தரர்" என்றும் பட்டங்களைச் சூட்டினர். இதே ஸ்ரீரங்கத்தில்தான் ஸ்ரீ வேதாந்த தேசிகர் பல கிரந்தங்களை இயற்றினுர்.

# "அயனும் மாலும் அரனும் ஒன்றே"

**மணவாளதாசன் — சென்னை.**

அவனரு ளென்று அறிவாய் மனமே!
அவனியி லறமே பிறவே நிலையே!
சிவனரி யன்றிச் செகமது இலையே!
பவபர வாழ்வைத் தெளிவது நிலையே!
மூடர்ப் பழக்க மாமுழு தூட்டும்;
நாடக் கிடைப்ப தாமென கூட்டும்;
தேடற் கிடையாத் தெய்வத் திருவின்
அருள்பெற் றறியார் முறைசொற் றனரே!
சித்தென் பதினால் சிலரை ஆழ்த்தி,
பத்திப் பெருக்கென பலரை வீழ்த்தி,
முத்தித் தருவென் முனியானென்னும்
பித்தர் பெருமை பிறர்பே சுவரே!
வித்தர் காணா வேதப் பொருளை
சித்தர் கண்டார்; அவரைக் காணா
தெத்தர் திரிவர்; இனிமே லுரைக்க
வித்தைச் செய்யும் திறமே சித்து!
சித்தென் பதுவொர்ச் சித்தத் தாணை!
சித்தர் வேறாம்; செகமே அறிவீர்!
முத்திப் பெறவே முயலும் முனியச்
சித்தர் புலனுக் ககப்பட மாட்டார்!
மெத்தப் பேசி மெல்ல வழைத்து,
தன்வய மாக்கித் தந்திரம் ஊக்கும்
வித்தைச் செய்யும் மாந்தர் சித்தாம்!
இத்தை நீங்கள் இனிதென வேண்டா;
வித்தொன் றுண்டே! வினைவே றுகளைந்
திட்டப் பொருளாம்; பொருளே மருளாம்!
ஆய்ந்தும் அறியா அணைந்த வேதந்
தோய்ந்த ஜோதி! தோன்றா வாதி!
மாலுஞ் சிவனும் சேர்ந்திரு பாதி!
ஆலங் கண்டோன்; ஆலம் உண்டோன்;
ஞாலங் கண்டோன்; மூலம் கொண்டோன்!
அயனும் மாலும் அரனும் ஒன்றே!
அதனினு மேலும் இறையும் இன்றே!
அறிவாய் இதனைத் தெளிவாய் நன்றே!

அவர்தம் படைப்புக்களிலேயே மிகச் சிறந்தது எனப் போற்றப்படும் 1000 ஸ்லோகங்கள் தாங்கிய "ஸ்ரீ பாதுகா ஸஹஸ்ரம்" என்னும் திவ்விய ஸ்லோகங்கள், சாக்ஷாத் ஸ்ரீரங்கநாதரின் பாதுகையின் பெருமையை எடுத்து இயம்புவதாக அமைந்துள்ளது. இதனை ஸ்ரீவேதாந்த தேசிகர் ஒரே இரவில் எழுதி முடித்தார் என்பது குறிப்பிடத் தகுந்த ஒன்றாகும். (சுமார் மூன்று மணிநேரமே எடுத்துக் கொண்டார் என்றும் பெருமையாகக் கூறுவர் அறிஞர்கள்!)

ஸ்ரீ வேதாந்த தேசிகரின் உபதேசங்கள் உபநிஷதம், பகவத் கீதை, பிரம்ம ஸூத்திரம் ஆகியவற்றைத் தழுவியே இருந்தது என்பது மிகவும் குறிப்பிடத் தகுந்ததாகும். ஸ்ரீராமானுஜரின் விசிஷ்டாத்தைவதக் கொள்கையையே ஸ்ரீ வேதாந்த தேசிகரும் பரப்பினார். மேலும், நியமமான வாழ்க்கை முறையையே சாதாரண மனிதன் மேற்கொள்ள வேண்டும் என்றும் வலியுறுத்தினார். இதற்காக சாதகன் "பிரபத்தி யோகம்" (viz. absolute self - surrender to Almighty) என்ற பூரண நிலையை அடைய வேண்டும்' என்றும் குறிப்பிடுகிறார்.

ஸ்ரீ வேதாந்த தேசிகர் மிகவும் எளிமையான வாழ்க்கை முறையையே மேற்கொண்டார். தினமும் 'உஞ்சவிருத்தி' செய்து அதன் மூலமாகவே உண்டு மகிழ்ந்தார். காசு-பணத்தையோ அல்லது புகழையோ ஒரு போதும் விரும்பாதவர். அவரது சீடர்களும் அவருடன் நெருங்கிப் பழகக் கூடியவர்களின் துணையைக் கொண்டும் மட்டுமே வாழ்ந்து வந்தார். ஒரு முறை அவரது நண்பர் ஒருவர், ஸ்ரீவேதாந்த தேசிகரின் ஏழ்மை நிலையையும், அவர் பெற்றிருந்த அபரிமிதமான ஞானத்தையும் கண்டு, தான் ஆஸ்தான வித்வானாகப் பணிபுரியும் விஜயநகர ராஜாவிடமிருந்து மிகுந்த சன்மானங்களைப் பெற்றுத் தருவதாகக் கூறி, ஸ்ரீவேதாந்த தேசிகரை அரசவைக்கு அழைத்தார்.

ஆனால் ஸ்ரீவேதாந்த தேசிகர் அவர் நண்பரின் வேண்டுகோளை நிராகரித்தது மட்டுமில்லாமல், அன்றே "வைராக்ய பஞ்சகம்" என்ற ஸ்லோகத்தையும் இயற்றினார். இதனால், உலக பந்தங்களில் ஆசை வைக்காமல் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள ஆயத்தமானார். தான் வணங்கும் மலைவாழ் அப்பனாகிய சாக்ஷாத் கஞ்சி வரதப் பெருமாளை விடுத்து, மன்னவர்க்குச் சேவை செய்ய எக்காரணம் கொண்டும் முன்வரமாட்டேன் என்ற வைராக்யம் பூண்டு நின்றார் ஸ்ரீ வேதாந்த தேசிகர்.

சுமார் நூறு ஆண்டுகளுக்கும் மேற்பட்ட, பூரண வாழ்க்கையினை செவ்வனே வாழ்ந்தவராய், ஸ்ரீவேதாந்த தேசிகர் ஹிந்து மதத்திற்கும், குறிப்பாக வைஷ்ணவ சம்ப்ரதாயத்திற்கும் ஆற்றிய தொண்டுகள், மனிதன் ஆன்மீகப் பாதையில் முன்னேறி, மோக்ஷ ஸாதனத்தைப் பெற வழிவகை செய்வனவாக அமைந்துள்ளன என்று கூறின் அது மிகையாகாது. அவர் விடுத்துச் சென்றுள்ள ஆன்மீகப் பணியினைக் கடைபிடித்து, மோக்ஷ கதியை அடைவோமாக! ★

# சிவராத்ரியும் சிவ வழிபாடும்



சிவலிங்கத்தின் மீது விளையாட்டுக்காக ஒரு பில்வ தளத்தை எறிந்தால் கூட அருள்புரிந்துவிடுவார் என்று சிவபிரானின் பெருமை பற்றி விவரிக்கிறுர் நீலகண்டதீட்சதர் என்ற வடமொழிக்கவிஞர். சுவேதாசுவதர உபநிடதமும், சுக்ல யஜுர் வேதமும் சிவ வழிபாட்டின் பெருமையைக் கூறுகின்றன. வரலாற்று அறிஞர் சர் ஜான் மார்ஷல் தனது நூலில், சிந்து சமவெளி எங்கும் சிவக்குறிப்புகள் காணப்படுவதையும் தற்போதைய மதவழிபாட்டு முறைகளே அப்போதும் கடைப்பிடிக்கப்பட்டு வந்துள்ளது என்றும் கூறுகிறுர். ஈராஸ் பாதிரியார் சிந்து சமவெளியில் "எஞன்" என்ற கடவுள் எண்குணத்தான் எனப்படும் சிவனே என்கிறுர். சாக வம்ச அரசன் மோஹன் என்பவன் தன் நாட்டு நாணயங்களில் நந்தியின் உருவத்தைப் பொறித்தான். 11-ஆம் நூற்றுண்டில் தஞ்சை கண்டிராத்திய சோழதேவரின் மனைவி செம்பியன்மாதேவி தன் கணவனையே பரமேசுவர ரூபமாக வழிபட்டதாக பழையாறை கல்வெட்டு கூறுகிறது. தவிரவும் அயல்நாடுகளிலும் சிவவழிபாடு நடந்ததற்கு ஆதாரங்கள் உள்ளன.

தற்போது நியூயார்க்கில் பிளஸ்சிங் என்ற இடத்தில் விஞயகர் கோயிலும், பீட்ஸ்பர்கில் திருவேங்கடவன் ஆலயமும் அடுத்து டெக்ஸாஸ் நகரில் ஹூஸ்டனில் அன்னை மதுரை மீனுட்சியம்மைக்கும் ஆலயம் கட்டி வழிபாடு நடந்து வருகிறது. நாம் மேற்கத்திய நாடுகட்கு தற்போது புதிதாக சிவ வழிபாட்டைப் பரப்பவில்லை. அமெரிக்க கொலஹடே ஆற்றங்கரையில் ஆயிரக்கணக்கான ஆண்டுகட்கு முற்பட்ட சிவாலயம் இருந்ததாக ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். பிலிப்பைன்ஸ் மக்கள் சிவனை சிவப்பன் என்று வழங்கி வருகின்றனர். ஆசியாவில் சிவாஸ் என்ற நகரில் சிவ வழிபாடு இருந்துவந்ததாகத் தெரிகிறது. ஜப்பானியாரின் புராதனக் கடவுள் "சிவோ" என்பதாகும். பாபிலோனிய ஏடுகளில் சிவன் என்பது ஒரு மாதத்தின் பெயராகக் கூறப்பட்டு உள்ளது. ஆக்கேடியா மக்கள் முக்கியமான ஒரு நட்சத்திரமாக சிவனைக் கூறுகின்றனர். பின்லாந்தின் காவல் தெய்வம் சிவனே. புதைப் பொருள் ஆராய்ச்சி மூலம் கொரியாவில் வீதிக்கு ஒரு சிவலிங்கம் இருந்து இருக்கிறது என்பது புரிகிறது. மற்றும் இந்தோனேஷியா, திபெத், இலங்கை எங்கும் சைவ வழிபாடு விளங்கி வந்துள்ளது.

திபெத் மக்கள் வருடம் ஒரு முறை த்ரிபாவை, த்ரியம்பாவை என்ற பெயரில் விழா நடத்துகிறுர்கள். எகிப்து நதிக்கரையில் அனேக சிவலிங்கங்கள் கண்டு எடுக்கப்பட்டன. சயாம் மன்னரின் முடி சூட்டு வைபவத்தில் மாணிக்கவாசகரின் திருவெம்பாவை பாலி எழுத்துக்களில் எழுதி பழக்கப்பட்டுவந்து இருக்கிறது.

**திப்பிராஜபுரம் B. இரவீந்திரன், B.A.**

இத்தகைய சிவலிங்கத்தின் பெருமையை ஸ்காந்த புராணம்,

"லிங்க மூர்த்தௌ ஸதா காலம்
விநா மந்த்ராதி ஸத்க்ரியாம்
ப்ரஸன்னோ நிவஸாம்யேவ
பக்தி பாஜாம் விமுக்தயே"

என்று கூறுகிறது. அதாவது ஒரு சமயம் ப்ரளயம் முடிந்து ச்ருஷ்டி தொடங்கும் சமயம் இந்த்ராதி தேவர்கள் சிவபிரானைப் பூஜிக்க விரும்பினர். உடனே கயிலையை அடைந்து தாங்கள் எப்பொழுதுமே

ஸாநந்தியமாக இருக்கும் இடத்தை எங்களுக்குத் தெரிவிக்க வேண்டும் என்று வேண்டினர். அதற்கு ஈசன், "தேவர்களே நான் எப்பொழுதும் லிங்க வடிவில் குடி கொண்டு உள்ளேன். அதில் வஸித்துக் கொண்டு ப்ரதிஷ்டை, மந்த்ரம், பூஜை எதுவும் இன்றி இருந்தால்கூட பக்தர்களை ரக்ஷித்து வருகிறேன்" என்று பதிலளித்ததாகக் கூறுகிறது. சிவலிங்கத்தையோ ஸாளக்ராமத்தையோ, பஞ்சாயதன பூஜை போன்ற முறையின்றி மனத்தூய்மையும் உள்ளன்பும் கொண்டு பூசித்தாலும்கூட அதுவும் ஈசுவர ப்ரீதியாகும் என்று வேத சாஸ்திர தத்துவம் என்ற நூல் கூறுகிறது.

பத்மராகம், வஜ்ரம், மரகதம் முதலிய ரத்னங்களால் ஆன லிங்க பூஜை சிறந்த பலனைத்தரும் என வராஹ புராணம் கூறுகிறது. மண், விபூதி, ஆவின் சாணம், மாவு, தாம்பரம், வெண்கலம் இவைகளில் யாதேனும் ஒன்றால் ஆகிய லிங்கத்தை ஆராதிக்கலாம் என்றும், மரத்தாலான லிங்கம் செல்வத்தை அருளும் என்றும், ஸ்படிக லிங்கம் ஸர்வாபீஷ்டங்களையும் கொடுக்கும் என்றும் பவிஷ்ய புராணம் கூறுகிறது. எந்த வஸ்துவால் செய்த லிங்கமாயினும் பூஜைக்கு உகந்ததே என்று விஷ்ணு தர்மோத்தரம் என்று நூல் கூறுகிறது. ப்ருதிவியாகிய மண்ணால் ஆன லிங்கத்தை செய்து எவன் அர்ச்சிக்கிறானோ அவன் நீண்ட ஆயுளையும், பலத்தையும், செல்வத்தையும் பெற்று நன் மக்களுடன் சுகமாக வாழ்ந்து, கோரிய வரத்தையும் பெறுகிறான் என்பதை நாந்திகோசம் என்ற நூல் விளக்குகிறது. அதாவது,

"ஆயுஷ்மான் பலவான் ஸ்ரீமான்
புத்ரவான் தனவான் ஸுகீ
வரமிஷ்டம் லபேல் லிங்கம்
பார்த்திவம் யஸ் ஸமர்ச்சயேத்
தஸ்மாத்து பார்த்திவம் லிங்கம்
க்ஞேயம் ஸர்வார்த்த ஸாதகம்"

என்பதாகும்.

இனி லிங்கங்களின் அளவு முறை பற்றி கவனிப்போம். லிங்கங்களின் அமைப்பு, லட்சணங்கள் பற்றி மகுடாகமம் என்ற நூல் விரிவாகக் கூறுகிறது. இந்த ஆகமம் லிங்கங்களை தெய்விகம், அர்ச்சா, காணபம், மானுஷ்யம் என நான்கு வகைகளாகப் பிரிக்கிறது. தெய்விகம், அர்ச்சா இரண்டும் தேவர்களாலும், காணபம் என்பது கணங்களாலும், மானுஷம் என்பது மனிதர்களாலும் ஸ்தாபிக்கப்பட்டவை என்று கூறுகிறது. இவை தவிர தானாகவே உண்டான ஸ்வயம்பு லிங்கங்களையும், இயற்கையாக கண்டகி, ரேவா, நர்மதை நதிகளில் கிடைக்கும் பாணலிங்கங்களையும் சேர்த்து ஆறு வகையாக காமிகாமம் கூறுகிறது. பாணலிங்கங்களில் தூய வெண்மையில் பளீரெனத் தெரியும் சிவந்த ரேகைகளை உடையது. முழுவதும் பசுமை, கருப்பு போன்ற பலவகை பாணங்கள் உண்டு. சரிபாதி வெண்மை சரிபாதி சிவப்பு நிற பாணலிங்கம் "அர்த்தநாரீ" என்ற வகையாகும். மனிதர்களால் ஸ்தாபிக்கப்படும் லிங்கத்தின் மேற்பகுதியில் "ப்ரம்மஸூத்ரம்" எனப்படும் சில நுட்பமான கோடுகள் அமைப்பதுபற்றி சில ஆகமங்கள் கூறுகின்றன. லிங்க மஸ்தக விஸ்தாரம், சக்தி பீடத்தின் உயரம், தாழ்வரையின் அளவு முதலியவைகள் பற்றிய செய்திகளை "ப்ரயோக பாரிஜாத க்ரியாஸாரம்" என்ற நூல் கூறுகிறது. 3 அங்குல நீளம் 3 அங்குல அகலம் 3 அங்குல உயரம் உடைய லிங்கம் வீடுகளில் பூஜிப்பதற்கு ஏற்றதாகும். இது முதல் தரமானது. லிங்கத்தின் கன அளவு இரண்டு அல்லது மூன்று அங்குலம் உடையது என்பது கடைநிலையாகும். ஆனால் பாண லிங்கங்கள் (ஸ்வயம்பு) எந்த அளவில்

வேண்டுமானாலும் இருக்கலாம். இதேபோல் ஆலயங்களில் எந்தவித அளவிலும் சிவலிங்கங்களை வழிபடலாம் என்கிறது.

பொதுவாக இல்லங்களில் பூஜிப்பது எந்த தேவதையின் பிரதிமையாயினும் சிறிய அளவில்தான் உருவம் அமைந்து இருக்க வேண்டும் என்று விஷ்ணுதர்மம், பவிஷ்ய, பார்க்கவ அர்ச்சன தீபிகை முதலிய நூல்கள் கூறுகின்றன. வராஹ பாத்ம புராணங்களில் பின்னமான சிலையை வீட்டில் வழிபடக் கூடாது என்று கூறி உள்ளது. ஆனால் ஹேமாத்ரி, நிர்ணய ஸிந்து முதலிய நூல்கள் ஸாளக்ராமத்துக்கு மட்டும் ஒடிந்தாலும், உடைந்தாலும், பல துண்டங்களாகப் பிளக்கப்பட்டு இருந்தால்கூட வழிபட்டால் சுப பலனையே அளிக்கும் என்கிறது. இதேபோல் பாணலிங்கங்களில் உள்ள சிறு சிறு ரேகைகள், பள்ளங்களைப் பின்னம் என்று கருதிவிடக் கூடாது.

சிறிய வழிபாட்டால் பெரிதும் த்ருப்தி அடைபவர் சிவபெருமான் என்பதால் வேதங்கள் இதுவரை "ஆசுதோஷி" என்று அழைக்கின்றன. அதுவும் சிவராத்ரி போன்ற தினங்களில் வழிபடுதல் பெரும் பயனை அளிக்கும். எனவே சிவராத்ரியன்று பகலில் கனி கிழங்கு பால் முதலியன உண்டு. இரவில் கண்விழித்து சுத்த உபவாசம் இருந்து சிவாலய தரிசனம், சிவநாமஜபம், சிவலிங்கத்தை பில்வ தளங்களால் அர்ச்சித்தல் முதலிய வற்றில் ஈடுபட வேண்டும். இக்ஷ்வாகு குல அரசனான கல்மாஷபாதன் இந்த சிவராத்ரி விரதத்தை அனுஷ்டித்துதான் தனது ப்ரம்மஹத்தி தோஷம் நீங்கப் பெற்றான். எனவே இந்த தினத்தில் சிவபூஜை மிகச் சிறந்தது. பலதீபிகை என்ற நூல்

" பூஜாம் சம்போ, ஸ்ரீபதே
ஸத்வ்ரதா னி ச"

என்று கூறுகிறது. அதாவது சிவனைப் பூஜையாலும், திருமாலை வ்ரதங்களாலும் மகிழ்விக்கலாம் என்பதாகும். சிவராத்ரியன்று இறைவனுக்கு ஒரு பில்வத்தை அர்ச்சிப்பதால் பதினாயிரம் ஆண்டுகள் நியமத்துடன் கங்கையில் ஸ்னானம் செய்த தூய்மையையும் பயனையும் பெறலாம் என சிவபுராணம் கூறுகிறது. அதாவது,

" வர்ஷாணாமயுதம் யேன
ஸ்னாதம் கங்காஸரிஜ்ஜலே
ஸக்ருத் பில்வார்ச்சனேனைவ
தத்பலம் லப்யதே நரை:

என்பதாகும்.

சிவராத்ரியன்று சிவபிரானுக்கு விசேஷ அபிஷேகங்களைச் செய்வதை பெரும் பேறுகளை அடைய வழி என்று அறநூல்கள் கூறுகின்றன.

ஆதிசங்கரர் "ப்ரபஞ்ச ஸாரம்" என்ற நூலில்,

"தசாபராதம் தோயேன
க்ஷீரேண ஹரதே சதம்
ஸஹஸ்ரம் நாசயேத் தத்நா
தத் க்ருதேன தசோத்தரம்
நாளிகேரோதகைர் லக்ஷம்
மதுநா தச லக்ஷகம்
இக்ஷுகண்டரஸை: கோடிம்
சுந்தேன தத் அனந்தகம்"

என்று குறிப்பிடுகிறார். சுத்தமான நீரால் அபிஷேகம் செய்வது பத்து வகையான பாபங்களையும், பால் அபிஷேகம் 100 பாபங்களைப் போக்கும் என்றும், தயிர் 1000 பாபங்களையும், நெய் 10,000 பாபங்களையும், இளநீர் லக்ஷம் பாபங்களைப் போக்கும் என்றும் தேன் லக்ஷத்தையும், கரும்புச் சாறு கோடி பாப நிவர்த்தி செய்ய வல்லது என்றும் குறிப்பிடுகிறார். ஆனால் கடைசியில் சந்தனாபிஷேகம் போக்காத பாபங்களே இல்லை என்று கூறிகிறார்.

மேலும் தர்ம சாஸ்திரங்களில் எந்தெந்த பொருளை அபிஷேகம் செய்வதால் என்ன பலன்கள் என்றும் கூறுகிறது. தைலாபிஷேகம் பக்தியையும், பழங்கள் ஜன வசீகரத்தையும், பஞ்சாமிர்தம் ஆயுளையும், பால் ஸத்வகுணத்தையும், தயிர் உடல் நலத்தையும், தேன் இசைப் புலமையையும், இளநீர் புத்திரப்பேற்றையும், விபூதி ஞானத்தையும், சந்தனம் சுவர்க்கபோகம், பாபநாசம், சித்த சுத்தியையும், பஞ்சகவ்யம் கல்வியையும், பன்னீர் புகழையும், செல்வத்தையும் அளிக்கும் என்று கூறுகிறது. இறைவனுக்கு வஸ்த்ரம் சார்த்துவது வருமானத்தைப் பெருக்கவும், புஷ்பத்தை அர்ப்பணிப்பது மகிழ்ச்சியையும், கற்பூர ஹாரத்தி முக்தியையும் அளிக்கவல்லது என்று கூறுகிறது. எனவே சிவராத்ரியன்று விபூதி, ருத்ராட்சம், பஞ்சாட்சர ஜபம் முதலியவற்றை அணிந்து சிவ வழிபாடு செய்து, எல்லா வகை நலமும் பெற்று உய்வோமாகுக. ஸ்காந்த புராணம்,சிவ சரித்ரங்களைக் காதினால் கேட்டாலும் கேட்கும்படி செய்தாலும் அவர்களிடம் சிவபெருமான் "அபர்ணா" என்ற பெயரை உடைய தன் தேவியுடன் வந்து தங்கி அருளுகிறார் எனக் கூறுகிறது. எனவே நாமும் நிச்சயமாக சிவனருளைப் பெறுவோம் என்பது திண்ணம்.

"கர்ணே சிவபுராணானாம்
ச்ரோத்ருணாம் பரமேச்வர:
அபர்ணயா ஸஹைவாஸ்தே
நாத்ர கார்யா விசாரணா"



# குரு பெயர்ச்சி பலன்கள்

வ்ருஷபத்வஜாய வித்மஹே க்ருணி
ஹஸ்தாய தீமஹி
தன்னோ குரு: ப்ரசோதயாத்.

**த்யானம்**

குருணும் தேஹ புஷ்டிஸ்ச புத்தி
புத்ரார்த்த ஸம்பதா
ஜீவ ஆங்கிரஸோ வாசஸ்பதி
சித்ர சிகண்டிஜ:
ஆர்யோ ப்ருஹஸ்பதி சூரோ
வாகீஸோ வசஸாம்பதி:

தேகபுஷ்டி, புத்தி கூர்மை, மக்கள் செல்வம், மக்களால் மன சந்தோஷமடைவது பணத்தை சேர்ப்பதுபொக்கிஷங்களின் அதிகாரம் ஆகிய இத்தகைய பேறு தருபவர் குரு பகவான்.

12 ராசிகளில் குரு பகவான் சஞ்சரிக்கும் பலன்கள்

1. ஜன்ம லக்னம் அல்லது நாம ராசிகளில் முதலாவது ஸ்தானத்தில் குரு அமைந்திருந்தால் உயர்ந்த பதவிகள் தேச தேசங்களில் பதவிகள், கௌரவங்கள், உடல் ஆரோக்ய சுகங்களை அளிப்பார்.

2. இரண்டாமிடமான தன ஸ்தானத்தில் குரு அமைந்திருந்தால் தன லாபங்கள், நேத்ர சுகங்கள், சத்திய வாக்கை பேசுபவர்கள் சொல்லுக்கு செல்வாக்கு, காதுகளில் ஆபரணங்களணிவது பிரயாணங்களால் தன லாபங்களைத் தருவது.

3. மூன்றாமிடத்தில் அமைந்திருந்தால் தைரியசாலிகள் சங்கீத கலைகளில் புகழ் பெறுவார்கள். எதிர் காலத்திற்கு தேவையான வசதிகளைப் பெறும் சாமார்த்தியசாலிகள். உடன் பிறந்தவர்களோடு ஒற்றுமையாக இருப்பார்கள்.

4. நான்காமிடத்தில் குரு அமைந்திருந்தால் தாயாருக்கு உடல் சுகங்கள். நீண்ட ஆயுள், நாற்கால் ஜீவ லாபங்கள், பந்துக்களால் விசேஷ நன்மைகள். வாகன வசதிகள் நிலங்களைச் சீர்படுத்தி நற்பலன்களை அடைதல் இவற்றை அளிப்பார்.

5. ஐந்தாமிடத்தில் குரு அமைந்திருந்தால் சந்ததிகள் எதிரிகளாவார்கள். ஆனல் வசதி படைத்தவர்கள். பெண் சந்ததிகளால் சந்தோஷமதிகரிக்கும், தொழில்களில் விசேஷ அனுகூலங்கள். கூட்டுத் தொழில் தவிர்த்தல் நலம். நிதிகள் போன்ற கூட்டுகள் அதாவது ஃபைனான்சிகளில் அதிக லாபம் தருவார்.

6. ஆறுமிடத்தில் அமைந்திருந்திருந்தால் உறவினர் பகை அதிகமாகும். குடல் சம்பந்த பலவீனங்கள் அதிகமாகும். சந்தானங்களின் சுப செலவுகளும் புத்தி பலவீனம் இவற்றைத் தருவார்.

7. ஏழாமிடத்தில் அமைந்திருந்தால் விரும்பிய மனைவி அழகுள்ளவள். கணவனைப் பிரியாமல் கவலைகளைப் போக்கக் கூடியவள். வஸ்து வாகனமுள்ளவள். மனைவியை மணந்த பிறகு அனைத்திலும் உயர் பலன்களையடைவான். எந்நேரமும் சிந்தனையின்றி சந்தோஷமாக இருப்பர்.

8. எட்டாமிடத்தில் குரு அமைந்திருந்தால் ஆயுள்பலம் அதிகம், மர்மமான இடங்களில் வியாதிகள் காணுதல், அறுவை சிகிச்சைகளால் பூர்ண பலன் அடைவதும் நற்பணிகளுக்கான பிரயாணங்கள் செல்வது தன சேர்க்கை ஆயுள் இலாகாவில் பிரதானிகளாக இருப்பார்கள். மோக்ஷ சாம்ராஜ்ய தீர்த்த யாத்திரை தெய்வ தரிசனங்கள், உடல் அசௌக்யம் நீக்கி ஆரோக்கியம் தருவார்.

9. ஒன்பதாமிடத்தில் அமைந்திருந்தால் செல்வம் பெருகும். எதிர்பாராத தனலாபம். தர்ம சிந்தனையை மிகுவிக்கும்.

10. பத்தாமிடத்தில் அமைந்திருந்தால் பதவியை உண்டாக்குவார். பலவிதத்திலும் கௌரவங்களும் தன லாபங்களும் பந்து கல்யாண வைபவங்களும் பெரிய என்ஜின்கள்வைத்து வியாபாரம் செய்வதும் யக்ஞ யாகாதிகளில் முதலீடு வைத்து நடத்துவதும் உண்டாகும்.

11. பதினோராமிடத்தில் அமைந்திருந்தால் எதிலும் வெற்றி காண்பர். இவர்களுக்கு வரும் தீமைகள் தலைக்கு வந்தது தலைப்பாகையோடு செல்லும். நிரந்தர பாக்யசாலிகள் தன சேர்க்கை. வட்டிக் கடைகளில் அதிக லாபமடைவர். கார்யசித்தி.

12. பனிரண்டாமிடத்தில் அமைந்திருந்தால் எதிலும் பொறுப்பின்றிக் கண்டவர்களை நம்பிமோசம் போவது. ஆடம்பரமாக வாழ ஆசைப்படுவர். இழந்த முதியோர் சொத்துக்களைச் சேர்க்க பாடுபடுவர். அனாவசிய செலவுகள் செய்யாமல் அவசியமான வற்றுக்கும்புதல்வர்களுக்காகவும் திரவிய நஷ்டத்தை அடைவார்கள்.

9 கிரகங்களில் உயர்ந்த பதவியை பெற்று ஐந்தாம் கிரகமான குரு பகவான் கும்ப ராசியை விட்டு மீன ராசிக்குப் பெயர்ச்சியாகிறார். அது அசுப பலன் தரும் நேரத்தில் பிரதி வியாழன் அன்று தட்சிணாமூர்த்திக்கு மேதா சூக்த பாராயணங்களும் நெய்

திரு. ஏ. ராகவய்ய ஜோசியர்
திருவள்ளூர்.

விளக்கேற்றி அர்ச்சனை செய்வதும் நலன் உண்டாக்கும்.

குரு பெயர்ச்சியின் பொதுப் பலன்கள் (2-2-1987) :

சுவஸ்திஸ்ரீ அக்ஷய வருடம் தை மாதம் 20ந்தேதிக்குச் சரியான ஆங்கிலம் (2-2-1987) சோமவாரம் உத்திரட்டாதி நட்சத்திரம் கூடிய சுப தினத்தில் காலை மணி 10.37க்கு உதயாதி நாழிகை 9.52க்கு ஆனந்த போதினி திருக்கணித பஞ்சாங்கப்படி மீன லக்னம் மீன வர்கோத்தம நவாம்சத்தில் சுமார் ஒரு வருஷ காலம் வரை கும்ப ராசியை விட்டு மீன ராசியில் குரு சஞ்சரிக்கிறார்.

இந்த குரு பகவான் லக்னத்தில் செவ்வாயுடன் சந்திரனுடன் கூடி ஆட்சி பெற்று குரு மங்கள யோகம், சந்திர மங்கள யோகம், குரு சந்திர மங்களயோகம்பெற்றுத் தன்னுடைய உச்ச ராசியான கடகத்தைப் பார்வையிடுகிறார். சப்தமத்தை பார்க்கிறார். 9 மிடத்தை பாக்கிய ஸ்தானத்தை பார்வையிட்டு வருவதால் இந்த குரு பெயர்ச்சி நல்ல பலன்களையே தரும். குடும்பத்தில் தொல்லைப்பட்டவர்களுக்குக் குடும்ப சுகங்களும், புத்திர சந்தான குறையுள்ளவர்களுக்கு புத்திர பாக்யங்கள், ஜல சம்பந்த வியாபாரிகளுக்கு நன்மைகள், அயல்நாட்டு பயணங்களும், உத்யோகஸ்தர்களுக்கு பதவி உயர்வுகள், விவசாயிகளுக்கு மட்டும் சிறு சோதனைகள், யந்திர சம்பந்த வியாபாரிகளுக்கு பூர்ண லாபங்கள், பழமையான கோவில்களுக்கு புத்துயிர் ஏற்படுதல், ஏழை மக்களுக்கு வீட்டு மனைகள் கிடைத்தல், ஏழை மாணவர்களுக்கு இலவச கல்விகளுக்கு ஸ்காலர்ஷிப் கிடைத்தல், தடைப்பட்ட கன்னியர்களுக்குத் திருமணங்கள் நடைபெறுதல், கணவனைப் பிரிந்த பெண்களுக்கு வாழ்க்கை ஏற்படுவதும், எதிரியாக இருக்கும் புதல்வர்கள் பெற்றோர்களை அனுசரிப்பதும், ஆசிரியர்களுக்கு நன்மைகளும், புரோகிதர் வைதீகர்களுக்கு வாழ்க்கை மேன்மைகளும் மன அமைதியில்லாதார்க்கு மகிழ்ச்சியும் உண்டாகும்.

குரு பகவான் 12 ராசிக்காரர்களுக்குத் தரும் பலன்கள்.

அசுவனி 4, பரணி 4, கார்த்திகை 1ம் பாதம் வரை: மேஷ ராசி.

தைரியசாலிகளான இவர்களுக்கு இந்த ஆண்டு குரு பகவான் சற்று சோதனைகள் தருவார். சொத்துக்களை வாங்கும் அவசரத்தில் வீண் சிக்கல்கள் அதனால் நஷ்டங்கள்; சொந்தக்காரர்களுக்கு உதவி அதனால் நஷ்டம்; மனவருத்தம், புதல்வர்களால் மனக் கவலைகள் அதனால் வியாதிகள். குடும்பத்தில் மன அமைதி குறைவு.

வியாபாரிகளுக்கு : கூட்டு வியாபாரத்தில் ஈடுபட்டு நிஷ்டூரங்களுக்கும் கடன் தொல்லைகளுக்கும் ஆளாவார்கள்.

உத்யோகஸ்தர்களுக்கு : உயிருக்குயிராக அலுவலகத்தில் பழகிய நண்பர்களால் இடமாற்றங்கள். அதனால் துன்பங்கள்.

விவசாயிகளுக்கு: பக்கத்து நிலக்காரர்களால் தொல்லைகள். வழக்குகள் தண்ணீர் தடைகள் மோட்டார் பம்பு செட்டுகளால் இடையூறுகள் ஏற்பட்டு மன வேதனை தரும்.

பெண்களுக்கு: மனதிற்கேற்றவாறு நடந்த கணவன் திடீர் என எதிரியாகி வேதனை தருவர்.

மாணவ மாணவிகளுக்கு: கடும் முயற்சியோடு படித்த மாணவ மாணவிகளுக்கு தேர்வுகளில் கடும் சோதனைகள் ஏற்படும். இதற்கு வியாழனன்று ஏழைகளுக்கு வியாழன் அன்று பச்சைக் கடலை தானம் செய்வதால் தடை நீங்கி நலன் உண்டாகும்.

கார்த்திகை மிகுதி 3 ரோகிணி 4 மிருக சீர்ஷம் 2 வரை : ரிஷப ராசி :

தியாக குணம் பெற்ற ரிஷப ராசி நேயர்களுக்கு இவ்வாண்டு வட்டி அசலுடன் குரு பகவான் மகிழ்ச்சியைத் தருவார். குடும்ப சுகம், தன லாபங்கள் பொருள் ஆதாயங்கள், விட்டுப் போன உறவுகள் சேர்க்கை. பந்து சுபகார்யங்கள் நடைபெறும்.

வியாபாரிகளுக்கு: கூட்டு வியாபாரத்தினின்று விடுபட்டு சுதந்திர தொழில் செய்ய நேரும். வெளியூர் செல்வதும் வியாபார லாபங்கள் அதிகமாகுதலும் கிளைகள் வைப்பதும் உண்டாகும்.

அலுவலர்களுக்கு: பலகாலமாக தடைப்பட்டு வந்த பதவி உயர்வுகள் உடனே கிடைத்து தென் திசை மாறுதல்கள்,எதிர்பாரா தனலாபம்,பொன் பொருள் சேர்க்கை ஏற்படும்.

விவசாயிகளுக்கு: வங்கிகளில் சேமிப்பு அதிகமாதல் நஞ்சை பயிர்களில் நல்விளைச்சல். எதிர்பாரா புது விவசாய முறைகளில் ஈடுபடுவீர்.

பெண்களுக்கு: கணவன் காட்டும் அன்பினால் மன சந்தோஷம் அதிகமாதல். எண்ணங்கள் ஈடேறும். தோழிகளால் நன்மை உண்டாகும்.

மாணவ மாணவிகளுக்கு: கல்வியில் விசேஷ தேர்ச்சிகள் முன்னேற்றங்கள் வசதிகள். பிள்ளைகளால் பெற்றோருக்கு ஆனந்தம்.

மிருக சீர்ஷம் மிகுதி 2 திருவாதிரை 4 புனர்பூசம் 3 வரை: மிதுன ராசி :

தயாள குணம் படைத்த இவர்களுக்கு இவ்வாண்டு குரு பகவான் மத்திய தர பலன்களைத் தருவார். குடும்பத்தில் பகைவர் சூழ்ச்சியால் மனமாற்றங்கள் பிளவுகள் ஏற்படும். துயரத்தை உண்டாக்கிய உங்கள் நண்பர்கள் கடைசியில் உங்கள் உதவியை நாடுவார்கள். ஜீவனுதிகளில் மறைமுக எதிர்ப்புகள், தொல்லைகள். உங்கள் நினைப்புகள் சாதகமாகவே அமையும்.

வியாபாரிகளுக்கு: புதிய தொழில்களால் போட்டிகளில் ஈடுபடலாம். ஆனால் நிதானம் இழக்காமல் இடை

பூறுக்குள்ளாகாமல் சாமர்த்தியத் துடன் நண்பர்கள் வார்த்தைகளில் ஆலோசனையுடன் யோசித்து செயல் படுங்கள்.

அலுவலர்களுக்கு: வரும் பதவிகள் ஆருயிர் நண்பர்களால் தடைபட்டுத் தாமதமாகும். மனைவி உடலுக்கு அசதிகள் ஏற்பட்டு நிவர்த்தியாகும்.

விவசாயிகளுக்கு: புஞ்சை பயிர் களில் ஆலோசனையோடு ஈடுபடுங்கள். கிழங்கு பயிர் செய்வது நலம்.

பெண்களுக்கு: அன்பு காட்டிய கணவன் அண்டை வீட்டு கலகத் தால் கோபித்துத் தொல்லை தருவர். அது சமயம் பொறுமையை கைவிடா மல் அன்பு காட்டி உங்கள் வசப்படுத் துங்கள்.

மாணவ மாணவிகளுக்கு: நற்சம யத்தில் பெற்றோர் பொறுப்பின்மை யால் இடையூறுகள் ஏற்படும். ஆசிரி யர்கள் ஆதரவால் எதிர்ப்பைசமாளிக் கலாம். மிகுந்த கவனம் தேவை. தடைகளுக்கு ஜன்ம (அ) நாம நட்சத் திரத்தன்று தட்சிணாமூர்த்திக்கு அர்ச் சனை செய்தல் நலம்.

புனர்பூசம் இறுதி பாதம்; பூசம் 4 ஆயில்யம் 4ம் பாதம் வரை: கடக ராசி.

சொல் நாணயம் உள்ள கடக ராசிக்காரர்களுக்கு இவ்வாண்டு குரு பகவான் பூர்ண நன்மைகள் தருவார். தீராத பகையுள்ள தந்தையார் தானாக வந்து சொத்துக்களை சாஸனம் செய்து வைப்பார். குடும்பத்தில் மகிழ்ச்சியும் தன லாபமும் ஏற்படும்.

வியாபாரிகளுக்கு: தான் செய்யும் தொழிலில் போட்டிகளால் புதிய முறைகள் மேற்கொள்வது; கப்பல் பயணங்கள்; துறைமுக வியாபார மூலம் தனலாபங்கள். தகப்பனார் வர் கத்தார்சுப கார்யங்களுக்குத் தலைமை வகிப்பதும் உண்டாகும்.

அலுவலர்களுக்கு: மேலதிகாரி ஆதரவுகளும் எதிரிகள் சரணடைதலும் உத்யோக உயர்வுகளும், தன லாபங்களும் கிடைக்கும்.

விவசாயிகளுக்கு: நஞ்சை தானி யங்கள் பயிரிடுவதால் தன லாபங்கள். வாழை, கரும்பு, மா, பலா தோட் டங்கள் குத்தகை எடுப்பதால் தன லாபங்கள் ஏற்படும்.

பெண்களுக்கு: பிரிந்த கணவன் வந்து சேர்வதும் சந்ததிகளைப் பெறு வதுமாகிய நல்வாழ்க்கை நடத்துவர்.

மாணவ மாணவிகளுக்கு: அற்புத வழியில் நலன் பெறுவதும், புதிய கல்வித் தேர்வுகளில் முதல் வகுப்பு தேர்ச்சிகளும் பரிசு களும் பெறுவார்கள்.

மகம் 4 பூரம் 4 உத்திரம் முதல் பாதம் வரை: சிம்ம ராசி :

எதிரிகளை வெல்லும் இவர்களுக்கு இவ்வாண்டு குரு பகவான் திறல் களைத் தருவார். அவசரத்தில் மனதில் ஏற்பட்டதைச் செயல்படுத்தி அல் லலுக்காளாவீர். பந்துக்கள் எதிரி யாகி வீண்பழி ஏற்படுத்துவர். ஆவே சத்தால் நிதானமிழந்து அல்லலடை வீர். வயிறு சம்மந்த கோளாறுகள். எச்சரிக்கை அவசியம்.

அலுவலர்களுக்கு: உங்கள் நண்பர் களே உங்களுக்கு எதிரியாவர். உத் யோகத்தை இடையூறு உள்ள இடங் களுக்கு மாற்றுவர். குடும்ப சுகத் திற்கும் இடையூறுகள் உண்டாகும்.

வியாபாரிகளுக்கு: சூழ்ச்சிக்காரர் களால் வியாபாரத்தில் வீண் நஷ்டங் கள் ஏற்பட்டு தணிக்கையாளர்களி டம் அகப்பட வேண்டியிருக்கும். வியாபாரத்தை விரிவாக்காமல் எச் சரிக்கையாக இருங்கள்.

விவசாயிகளுக்கு: புஞ்சை தானி யங்களில் வேர்க்கடலை, கேழ்வரகு பயிர்களில் நல்ல முன்னேற்றங்கள் ஏற்படும். நஞ்சை பயிர்களில் எச்சரிக் கையாக செயல்படவும்.

பெண்களுக்கு: பிறர் சொல் கேட்டு உங்கள் கணவன்மார்கள் தாய் வீட் டிற்குப் போய் வரும்படி இதமாகக் கூறிப் பிறகு பழிப்பார்கள். கணவன் நிலை புரிந்து நடந்து கொள்க.

மாணவ மாணவிகளுக்கு: சக மாணவர்களுடன் கூடி ஆசிரியர் விரோதத்தை பெறுவீர்கள்; தேர்ச்சி களில் துன்பம். பெற்றோருக்கு மன வேதனை.

பரிகாரம்: வியாழனன்று குரு பக வானுக்கு நெய் விளக்கேற்றுதல்.

உத்திரம் மிகுதி 3 ஹஸ்தம் 4 சித் திரை 2ம் பாதம் வரை: கன்னி ராசி :

அஞ்சா நெஞ்சத்தவரான இவர் களுக்கு பிரிந்த பந்துக்கள், பெற் றோர்கள், மனைவி மக்கள் வந்து சேர் வதும் எதிர்பாராத மகிழ்ச்சிகளும் மங்கள சேதிகளும், பல காலமாக தடைப்பட்ட குடும்ப சுபகார்யம் இவ்வாண்டில் நடந்து அனைவருக்கும் மகிழ்ச்சி தரும்.

வியாபாரிகளுக்கு: ஏஜென்சி கமி ஷன் வியாபாரிகளுக்கு அதிக லாபங் களும் விலகிய பங்குதாரர்கள் மீண் டும் வந்து சேருவர்.

அலுவலர்களுக்கு: தீராப்பகையை உண்டாக்கிய நண்பர்கள், மனைவி இனத்தார் உறவு கொண்டாடுவர். உத்யோகத்தில் இடையூறு செய்தவர் அனுகூலத்தை உண்டாக்குவார்கள்.

விவசாயிகளுக்கு: தண்ணீரால் இடையூறு ஏற்படுத்திய பக்கத்து நிலக்காரர்கள் நண்பர்களாவர். விவசாய லாபம் உண்டாகும்.

பெண்களுக்கு: பல விதத்தில் துன்பம் தந்த கணவனால் இன்ப சுகங் கள், எண்ணங்கள் ஈடேறும்.

மாணவ மாணவிகளுக்கு: பெற் றோர்களுக்கு மகிழ்ச்சி ஏற்படுமளவில் கல்வி கற்றாலும் ஆசிரியர்களின் ஆசி களும் தேர்வுகளில் வெற்றியும் கிடைக்கும்.

சித்திரை மிகுதி 2 சுவாதி 4 விசாகம் 3-ம் பாதம் வரை: துலா ராசி.

சுக துக்கங்களைச் சரிசமமாக நினைக்கும் இவர்களுக்கு சஞ்சலமும் கடன் உபாதைகளும் உண்டாகும். அனாவசிய செலவுகள், வீண் அபவாதம் உடல் பலஹீனம் புத்தி சலனமும் உண்டாகும்.

வியாபாரிகளுக்கு : லேவாதேவிகளை வழக்கு மூலமாக வசூலிக்க நேரும். தொழிலில் எதிர்ப்புகள் அதிகமாகி சிக்கலில் அகப்பட நேரும். கோபம் அதிகமாகி நிதானம் தவறும்.

அலுவலர்களுக்கு : இவர்கள் அதிகாரிகளை எதிர்த்துப் பகையைப் பெறுவர். சிலருக்கு இடமாற்றமும் ஏற்படும்.

விவசாயிகளுக்கு : நண்பர்களை நம்பி தன் நிலங்களை பயிரிடச் சொல்லி அவர்கள் காலத்தில் பராமரிக்காமல் வீண் நஷ்டங்களை உண்டாக்கிக் கலக்கத்தைத் தருவர்.

பெண்களுக்கு : கடும் வார்த்தைகள் கூறிய காரணத்தால் கணவனை உதாசினப்படுத்தி வீண் வேதனையடைவீர். ஆத்திரம் அதிகமானால் புத்தி சலனமாகும். அமைதியாக இருப்பது நலம்.

மாணவ மாணவிகளுக்கு : பெற்றோர் நிலைகளால் நிதி விஷயத்தில் இடையூறுகள் உண்டாகும். எச்சரிக்கை அவசியம். தடைகளுக்கு குரு பகவானுக்குக் கடலை தானியத்தை வைத்து நெய்விளக்கேற்றினால் இடையூறுகள் நீங்கும்.

விசாகம் மிகுதி 1 அனுஷம் 4 கேட்டை 4ம் பாதம் வரை: விருச்சிக ராசி.

தந்திரவாதியான இவர்களுக்கு இவ்வாண்டு குரு பகவானால் அழகுடைய புத்திர சந்தானங்கள், வாகன பூமி புதிய மனை போன்ற தன லாபங்களும் குடும்ப சுகங்களும் உண்டாகும்.

வியாபாரிகளுக்கு : பல காலமாக தடைப்பட்டு வந்த பான் புரோக்கர் வட்டிக் கடைகள் இதில் வைத்து ஆபரண லாபங்களும் தன லாபங்களும் கிடைக்கும்.

அலுவலர்களுக்கு : பிரமோஷன்கள் கேட்ட இடத்தில் கிடைக்கும். குடும்பத்தில் குதூகலங்களும் எதிர்பாரா தனலாபங்களும் கிடைக்கும்.

விவசாயிகளுக்கு : நண்பரால் ஏற்பட்ட நஷ்டங்களுக்கு வட்டி அசலுடன் லாபம் கிடைக்கும். குத்தகை நிலங்களில் தடைகள் நீங்கி பணம் வசூலாகிவிடும்.

பெண்களுக்கு : குழப்பங்களை உண்டாக்கிய கணவன்மார்கள் அன்பு ஆசை கொண்டு உங்கள் மனதிற்கேற்ப நடப்பார்கள். நினைத்த எண்ணங்கள் கைகூடும். மக்கட் செல்வம் உண்டாகும்.

மாணவ மாணவிகளுக்கு: சமயத்திற்குத்தக்க உதவிகளும் பெற்றோர் அன்பும் கிடைக்கும். உற்சாகம் வளரும். வகுப்பில் தேர்ச்சியுற்று பள்ளிக்குப் பெருமை தேடி தருவர்.

மூலம் 4 பூராடம் 4 உத்திராடம் 1ம் பாதம் வரை: தனுசு ராசி:

ஆசாரமான இவர்களுக்கு இவ்வாண்டு விசேஷமான கௌரவங்களும் மன அமைதிகளும் உண்டாகும். விடா முயற்சியோடு எக்காரியத்தையும் சாதிப்பார்கள். பிற்பகுதியில் மட்டும் எதிர்ப்புகளாக அமையும்.

வியாபாரிகளுக்கு: முன்பின் தெரியாத நபரோடு கூட்டு வியாபாரங்களில் ஈடுபட்டு சிக்கல்களுக்கு ஆளாவீர். போட்டிகளால் வீண் நஷ்டங்கள், பந்துக்களால் அமைதியின்மை உண்டாகும்.

அலுவலர்களுக்கு: உயர்வுகள் வருவதும் பிறகு இடையூறுகள் உண்டாவதும் குடும்ப அமைதி குறைவு; பூமி வாகன வகையில் அமைதி குறைவு, பந்து சுகங்கள் குறைவு.

விவசாயிகளுக்கு : கடலைக்காய், நெல், வாழைத் தோட்டம் வைத்தால் ஓரளவுக்கு அனுகூல பலன்களைக் காணலாம். இதர பயிர்கள் அவ்வளவு நலன்கள் தராது.

பெண்களுக்கு :வீட்டிற்குத் தேவையான உதவிகள் செய்யாமல் பொறுப்பில்லாமல் குறை கூறுவார்கள் உங்கள் கணவன்மார்கள். அவர்களைத் தந்திரத்தால் வென்று உங்கள் வயப்படுத்துங்கள்.

மாணவர்களுக்கு : பாடங்களில் தக்க சமயத்தில் படிக்காமல் பெரியோர்களின் கோபத்துக்காளாகுவீர்கள். பொறுப்புணர்ச்சியுடனிருந்து முன்னேற முயற்சியுங்கள். தடைகளுக்கு வியாழனன்று உபவாசமிருந்து மேதாசூக்த பாராயணம் செய்து நலம் காணுங்கள்.

உத்திராடம் மிகுதி 3 திருவோணம் 4 அவிட்டம் 2ம் பாதம் வரை: மகரராசி.

எக்காரியத்தையும் திறமையாகச் சாதிக்கும் மகர ராசிக்காரர்களுக்கு இவ்வாண்டு மத்தியதரமான பலன்களே நடந்துவரும். சகோதரனால் எதிர்ப்பாராதசிக்கல்கள், எதிர்காலத்திற்குத் தேவையான வசதிகள் ஏற்படும். கௌரத்திற்குப் பங்கமின்றி குருபகவான் காப்பார். வியாபாரிகளுக்குத் தங்கள் மதிப்புக் குறையாமல் இருப்பதற்காக சிக்கலான தொழில்களில் ஈடுபடுதல் மன அமைதி குறைகள் லேவாதேவிகளில் விட்டுக் கொடுத்ததலால் நஷ்டங்கள். அலுவலர்களுக்கு; குடும்ப அமைதி குறைவு; பொருளாதார முடக்கம், எடுத்தக் காரியங்களில் சிரமத்தின் பேரில் ஓரளவு வெற்றி காணுவார்கள்.

விவசாயிகளுக்கு: போட்டிகளுக்காகக் குத்தகை பயிர்கள் செய்து கைவிட்டு போகும். அதனால் கடன்படுதல், மனக்குழப்பங்கள் ஏற்படும்.

பெண்களுக்கு : குடும்ப கௌரவங்களை விட்டுக் கொடுக்காமல் கணவன் செய்யும் செயல்களைப் பொறுத்துக்

| | | | |
|---|---|---|---|
| ல செவ்வாய் ராகு குரு சந்திரன் | | | |
| புதன் | ராசி | | |
| சூர்யன் | | | |
| சுக்ரன் | சனி | | கேது |

| | | | |
|---|---|---|---|
| ல | சுக்ரன் | | சூர்யன் |
| செவ்வாய் சனி | அம்சம் | | குரு கேது |
| ராகு | | | |
| | | புதன் | சந்திரன் |

கொள்வதும், பந்துஜன பகைகளும் உண்டாகும்.

**மாணவ மாணவிகளுக்கு:** நன்றாக படிக்கும் திறமையிருந்தும் பெற்றோர் நிலைமைகளுக்காகக் கல்வியை விட்டுக் கடும் தொழிலில் ஈடுபடுதல், தடைகளுக்கு,பிறந்த (ஜன்ம) நட்சத்திரத்தன்று அரச மரத்தை 21 பிரதட்சணம் செய்வதால் நலன் காணலாம்.

**அவிட்டம் மிருதி 2 சதயம் 4 பூரட்டாதி 3ம் பாதம் வரை: கும்ப ராசி.**

ஆடம்பரமான இந்நேயர்களுக்கு குருபகவான் இவ்வாண்டு நல்ல பலன்களையே தருவார். எதிர்பாராத தனலாபங்களும் குடும்ப சுகங்களும் மன சந்தோஷங்களும் உண்டாகும். கல்யாண சுபகாரியங்கள் நடைபெறும்.

**வியாபாரிகளுக்கு:** எதிர்ப்புக்கள் நீங்கி உன்னத நிலை உண்டாகும். கூட்டுச் சேர்க்கையால் உயர் அனுகூலங்களும் பந்து ஜன சுகங்களும் உண்டாகும்.

**அலுவலர்களுக்கு:** அதிகாரிகள் அன்போடு ஆதரவோடிருந்து எதிர்காலத்திற்குத் தேவையான சலுகைகளைத் தருவதால் குடும்ப சுகமும் தனலாபமும் உண்டாகும்.

**விவசாயிகளுக்கு:** போதுமான அளவிற்குப் பயிர்கள் நற்பலனளிக்கும். தண்ணீர் வசதி சமயத்திற்கேற்ப கிடைக்கும். புதிய நிலங்களை வாங்குவீர்.

**பெண்களுக்கு:** உங்கள் சொல்படி கணவன் நடப்பார். நிதி வசதி நன்றாக அமையும். பற்றுக்குறையிராது.

**மாணவர்களுக்கு:** அக்கறையாக பள்ளிக்குச் சென்று ஆசிரியர் ஆதரவோடு படித்துத் தேர்ச்சி அடைவர். எடுத்த பிறவியின் பயனடைந்ததாக பெற்றோர் மகிழ்வர்.

**பூரட்டாதி 4ம் பாதம் உத்திரட்டாதி 4 ரேவதி 4ம் பாதம் வரை: மீன ராசி.**

தயா குணம் உள்ள மீன ராசி நேயர்களுக்கு இவ்வாண்டு குருபகவான் இடையூறுகளைத் தருவார். உங்கள் முயற்சியால் வாழ்க்கையில் முன்னேற்றங்கள். வீண் பேச்சுகளால் மன அமைதிக் குறைவு. மதிப்பு, மரியாதைக்கு இடையூறு உண்டாக்குவர். ஆனால் மதிப்புக்கு குறைவு வராது. குடும்பத்தில் வீண் விரயங்கள். சொத்துக்களால் நஷ்டம். வரவேண்டிய ஆதாயத்தை உறவினர் தடுப்பர்.

**வியாபாரிகளுக்கு:** அலைச்சல்கள். எதிரிகளால் இடையூறுகள், லேவாதேவிகள் தடைபடுதல், நண்பர்கள் எதிரியாவார்கள்.

**அலுவலர்களுக்கு:** காரணமில்லாமல் திடீர் மாற்றங்களும், வீண் பழிகளும் ஏற்படும். நண்பர்களால் இடையூறுகளும் உண்டாகும்.

**விவசாயிகளுக்கு:** புஞ்சை தானியங்கள் நஷ்டத்தைத் தரும். கிணற்று நீர் சமயத்தில் சதி செய்யும். மோட்டார் பம்பு செட்டுகளால் நஷ்டமேற்படும்.

**பெண்களுக்கு:** முயற்சிகள் பலிக்காமல் போனதாலும் வெளியூர் சென்று தடைகள் ஏற்பட்டதாலும் கணவன்மார்கள் எரிந்து விழுவர். வீண் செலவினங்கள். பழிகளை உண்டாக்குவர். அமைதியோடு இருப்பது நலம்.

**மாணவ மாணவிகளுக்கு:** கூட்டாகக் கூடி பள்ளியில் ஆசிரியர்களை எதிர்த்ததால் கல்வி, தேர்வுகளுக்கு இடையூறுகள் உண்டாகும். எச்சரிக்கையாயிருங்கள். அது சமயம் வியாழன் அன்று தட்சணாமூர்த்திக்கு பாலாபிஷேகமும் சஹஸ்ரநாம அர்ச்சனைகளும் நவக்ரஹ ஜபமும் செய்வதால் இடையூறுகள் நீங்கி நற்பலன் உண்டாகும்.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

